ாக் வெளியீடு, அக்ள்

# ஆத்திசூடி விளக்கக் கதைகள்

[இரண்டாம் புத்தகம்]






ஆசிரியர் :

திரு க இனியன்





திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி–6. சென்னை - 1

# பதிப்புரை

செந்தமிழ் மொழிக்கண் திருக்குறள் பொதுநூல். இது, நம் நாட்டகத்தும் வீட்டகத்தும் களிநடம் புரிதல் வேண்டும். அன்றே நம்தமிழகம் நன்றே மிளிரும் நாளாகும்.

இதன் சாயல்களே பிற்காலத்துத் தோன்றிய அற நூல்கள். அவற்றுள் ஒன்றே ஆத்திசூடி என்னும் அற நூல். இஃது எளிய இனிய நன்னடையில் ஔவையாரால் இயற்றப்பெற்றது.

'இளமையிற் கல்வி சிலையி லெழுத்து' என்ப. ஆகலான், நம் இளஞ்சிறூர்க்கு—விளையாடும் பருவ முளைப் பருவத்தினர்க்கு இவைகளைக் கதைகள் வாயிலாக விளக்குதல் சிறந்தது, நலந்தருவது எனக் கருதி, கொன்றை வேந்தன், மூதுரை, உலகநீதி, வெற்றிவேற்கை, நன்னெறி போன்ற ஏனைய அறநூல்களுக்கும் திரு. க. இனியன் அவர்களைக்கொண்டு விளக்கக் கதைநூல்கள் எழுதுவித்து நூலுருவாக்கி வெளியிட்டுள்ளோம்.

இது, அவற்றுள் ஆத்திசூடி விளக்கக் கதைகள் என்னும் நூலில் இரண்டாம் புத்தகம் ஆகும். இதனையும் ஏனைய விளக்கக் கதைநூல்களையும் பந்தெறிந்தாடுஞ் சிறூர் கைகளில் முந்திருப்பச் செய்து கற்கச் செய்வது, நம் தமிழகப் பெருமக்கள் கடன்.

இதனை வாங்கிக் கற்குமாறு செய்து எம்மையும் ஊக்குவிப்பார்களென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**




# உள்ளுறை

| | | பக்கம் |
|---|---|---|
| க. | நல்லவனான பச்சைமணி | 1 |
| உ. | தடுமாற்றம் விடுக | 2 |
| ங. | சோம்பலால் நேர்ந்த துன்பம் | 3 |
| ச. | விகருணன் நல்லவன் | 5 |
| ரு. | வறுமையிற் செம்மை | 6 |
| சு. | பெரும்பூதூர் உடையவர் | 8 |
| எ. | தன்வினை தன்னைச்சுடும் | 9 |
| அ. | பெருந் திருமாவளவன் | 10 |
| கூ. | இடுக்கணில் சிக்கிய இருவர் | 11 |
| க0. | உலகப்பனும் மாணிக்கமும் | 13 |
| கக. | புதுமையான மனிதர் | 14 |
| கஉ. | பயறுகேட்ட பார்ப்பனன் | 16 |
| கங. | அறிஞரின் பழமை நட்பு | 18 |
| கச. | பொய் வழக்காடிய அங்கமுத்து | 20 |
| கரு. | பேகனும் பெருமாளும் | 21 |
| கசு. | புதுமை மருத்துவம் | 22 |
| கஎ. | தருமரும் நடுவு நிலைமையும் | 24 |
| கஅ. | இறந்தொழிந்த மாணவர்கள் | 25 |
| ககூ. | திருவடியும் சிற்றுணவும் | 27 |
| உ0. | கல்வி பொருள் அளிக்கும் | 29 |
| உக. | வெண்ணாகனும் ஔவையாரும் | 30 |
| உஉ. | மனுநீதிச் சோழனுடைய கூறு | 31 |
| உங. | அறிவுபெற்ற அரசன் | 33 |
| உச. | கம்பரா? வம்பரா? | 35 |
| உரு. | பழங்கறி இன்ப அடிகள் | 36 |
| உசு. | இழிமொழி பேசிய இளைஞர்கள் | 38 |
| உஎ. | ஐயாக்குட்டியும் ஆறுமுகமும் | 39 |
| உஅ. | புகழேந்தியின் சொற்பொழிவு | 41 |
| உகூ. | சிறப்படைந்த கண்ணாயிரம் | 43 |
| ங0. | ஔவையாரும் அறிவிலியும் | 44 |

| | | பக்கம் |
|---|---|---|
| ௩௧. | நல்லியக்கோடன் | 45 |
| ௩௨. | நச்சினார்க்கினியர் நற்றமிழ்ச் சங்கம் | 47 |
| ௩௩. | சிற்றூரும் சிறுவர்களும் | 49 |
| ௩௪. | தருமசாமியும் சிறுவர்களும் | 51 |
| ௩௫. | பொன்னுண்டான் | 52 |
| ௩௬. | புலவரால் ஒழிந்த போர் | 54 |
| ௩௭. | அச்சம் அடைந்த அறிஞர் | 55 |
| ௩௮. | சூழ்ச்சி வீழ்ச்சியடைந்தது | 56 |
| ௩௯. | ஔவையார் திருமண வாழ்த்து | 57 |
| ௪0. | குதிரப்பனை உலகப்பன் | 58 |
| ௪௧. | பாண்டூர்ப் பல்லவராயன் | 60 |
| ௪௨. | மூர்க்க நண்பன் | 62 |
| ௪௩. | பலபேர் தலையிட்ட வேலை பாழ் | 64 |
| ௪௪. | ஔவையாரும் கணக்காயரும் | 65 |
| ௪௫. | காட்டு முனிவரும் வீட்டு முனிவரும் | 66 |
| ௪௬. | தற்புகழ்ச்சி கொண்ட கண்ணபிரான் | 68 |
| ௪௭. | நக்கீரனாரும் சொக்கநாதரும் | 69 |
| ௪௮. | கல்வியே சிறப்பளிக்கும் | 70 |
| ௪௯. | துறவியான மன்னன் | 71 |
| ௫0. | அறிஞரும் இளம்பூதனும் | 72 |
| ௫௧. | வழிக்கு வந்த மயிலப்பன் | 73 |
| ௫௨. | வன்சொல் நன்மையைக் கெடுக்கும் | 75 |
| ௫௩. | உயிர் பிழைத்த அறிஞர் | 76 |
| ௫௪. | உண்மை உணர்ந்த முத்துமாணிக்கம் | 77 |
| ௫௫. | நஞ்சப்பனும் நம்பிள்ளையும் | 78 |
| ௫௬. | அறநெறி தவறாத அரசி | 80 |




# ஆத்திசூடி விளக்கக் கதைகள்

## [இரண்டாம் புத்தகம்]



### க. நல்லவனான பச்சைமணி

ஓர் ஊரில் பச்சைமணி என்னும் பெயருடைய ஒரு சிறுவன் இருந்தான். அவன் சிறு வயதில் ஓரிடத்தி லும் அமைதியாக இருப்பதில்லை. வீடுவீடாகச் சுற்றிக் கொண்டிருப்பான். பள்ளிக்கூடத்தில் அவனை விட் டார்கள். அவன் அங்கும் அமைதியாக இராமல் வகுப்புக்கள் தோறும் அலைந்து திரிந்துகொண்டிருந் தான். பச்சைமணியைக் கண்ட மற்றைய மாணவர் கள், "சீ இவன் என்ன இப்படி அலைந்து திரிந்து கொண்டிருக்கிறான்," என்று கூறி இகழ்ந்தார்கள்.

பச்சைமணி நாளடைவில் பெரியவனானான். அவ னுக்குத் திருமணமும் நடைபெற்றது. அப்பொழுது கூட அவன் அலைந்து திரிவதை நிறுத்தவில்லை. தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும் பின்தொடரு மன்றோ? வீடு வீடாகப் போய் அமர்ந்துகொண்டு வீண்பேச்சுப் பேசலானான். பல தினங்கள் பொறுத் துப் பார்த்தார்கள். பிறகு பச்சைமணி தங்கள் வீட் டிற்குவந்து வீண் அரட்டையடித்துப் பொழுது போக் கக்கூடாது என்று கண்டித்தார்கள். பச்சைமணிக்கு

ஊரில் மதிப்பே இல்லாமற் போய்விட்டது. பச்சை மணியைக் கண்டவர்கள் 'ஊர் சுற்றி' என்று இகழ்ந்தார்கள்.

பச்சைமணிக்குப் பலரும் தன்னை இகழ்வது மதிப்புக் குறைவாக இருந்தது. எங்கும் சென்று சுற்றுவதில்லையென்னும் மனவுறுதியுடன் வீட்டில் தானே மடங்கிவிட்டான். அதன்பிறகு அவனுடைய மதிப்பு ஊரிலே உயர்ந்தது. பலரும் பச்சைமணி நல்லவனாகிவிட்டான் என்று பேசிக்கொண்டார்கள்.

"சையெனத் திரியேல்"

(இ - ள்.) சை என - மற்றவர்கள் உன்னைச் சீ என்று இகழுமாறு; திரியேல் - நீ அலையாதே.

---

## உ. நடுமாற்றம் விடுக

குற்றமற்ற ஒரு மனிதன்மீது ஊர்காவலாளர்கள் குற்றஞ்சாட்டினார்கள். குற்றம் சாட்டப் பெற்ற மனிதனுடைய பெயர் ஆண்டியப்பன். ஆண்டியப்பனை நீதிமன்றத்தில் கொண்டுபோய் நிறுத்தி உசாவினார்கள். ஆண்டியப்பன் மிகவும் அஞ்சிய இயல்புடையவன். நான்கு பேர் கூடிய இடத்தில் ஏதேனும் பேச வேண்டியதாக நேரிட்டால், மனம் போனபடி உளறி விடுவான்.

நீதிமன்றத்தில் நிறுத்தப்பட்ட ஆண்டியப்பன் நீதிமன்றத் தலைவரையும், ஊர்காவலாளர்களையும் கண்டு அஞ்சினான். போதாக்குறைக்கு ஊர்காவலாளர்கள் ஆண்டியப்பனை விறைப்பாகப் பார்த்தார்கள்.

ஆண்டியப்பனுல் தன்னுடைய குற்றமற்ற தன்மையை விளக்கமாக எடுத்துக்கூற முடியவில்லே. முன்னுக்குப்பின் முரணுகவும் வழவழப்பாகவும் பேசினுன். அதனுல் நீதிமன்றத் தலேவர் ஆண்டியப்பன் குற்றவாளிதான் போலும் என்று எண்ணித் தண்டனே விதித்துவிட்டார்.

ஆண்டியப்பன் குற்றமற்றவனுக இருந்தும் சொற் சோர்வுபடுமாறு பேசியபடியால், தண்டனேயடையுமாறு நேரிட்டது. ஆகையால் ஒவ்வொருவரும் எந்தச் சமயத்திலும் அஞ்சாமையோடு அழுத்தந் திருத்தமாகப் பேசவேண்டியது கட்டாயமாகும்.

"சொற்சோர்வு படேல்"

(இ - ள்.) சொல் - நீ பேசுஞ்சொற்களில் ; சோர்வு படேல் - தளர்ச்சியுண்டாகும்படியாகப் பேசாதே.

---

## ௩. சோம்பலால் நேர்ந்த துன்பம்

திருக்குடந்தை என்னும் ஊரிலே **செம்மையப்பன்** என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவனுக்கு அகவை இருபத்திரண்டுக்குமேல் ஆயிற்று. ஆயினும், அவன் எத்தகைய தொழிலிலும் ஊக்கமற்றவனுக இருந்தான். தெருத்தெருவாகச் சுற்றிக் கொண்டு வருவான். யாராவது, "வீணுகத் திரிகிருயே! ஏதேனும் ஒரு தொழிலேச் செய்யக்கூடாதா?" என்று கேட்டால், "செய்யாவிட்டால் என்ன? பட்டினிகிடந்து செத்தாபோவேன்?" என்று கேட்பான்.

அவன் பெருஞ் சோம்பேறியாக இருந்ததைக் கண்டு சிலர் அவனுக்கு, 'முழுச்சோம்பேறி!' என்று

பெயர் வைத்தார்கள். முழுச்சோம்பேறி பலநாள் வேலையற்று உண்டு உடுத்திக் காலங்கழித்துத் திரிந்தான். நாளடைவில் அவனுக்குப் பிண்டத்துக்கும் திண்டாட்டமாகிவிட்டது. அவனுடைய நண்பர்கள் அவனுக்கு உதவி செய்யவில்லை. அவனுக்குக் காலணாக் கொடுப்பார் எவருமில்லை. முழுச்சோம்பேறி மூன்று நாட்கள் வரையில் ஒரு பூங்காவிலே பட்டினியாகக் கிடந்தான். பிறகு, இனிமேல் பட்டினி கிடக்க முடியாது என்று முடிவு செய்து பிச்சையெடுக்கக் கிளம்பினான்.

வாட்டசாட்டமாக வளர்ந்திருந்த சோம்பேறிக்கு யாரும் பிச்சைபோடவில்லை. 'சோம்பேறிக் கழுதையை அடித்து விரட்டு' என்று கூறி வைதார்கள். சோம்பேறி, "அந்தோ சோம்பற் பழக்கத்தை மேற்கோண்டபடியினால், நமக்கு இந்தக் கதி ஏற்பட்டதே!" என்று வருந்தினான். சோம்பேறிப் பழக்கத்தை மேற்கொண்டால், யாரும் இவ்வாறுதான் அல்லற்படும்படியாக நேரிடும்.

ஆகவே, இளமையிலிருந்தே ஒவ்வொருவரும் சோம்பல் நீக்கிச் சுறுசுறுப்பாக இருக்கப் பழகவேண்டும். நாளடைவில் இந்த நல்ல பண்பு வளர்ந்து அவர்கள் வாழ்க்கையைச் செம்மைப் படுத்துவது உறுதி.

"சோம்பித் திரியேல்"

(இ - ள்.) சோம்பி - செய்யவேண்டுந் தொழில்களிலே ஊக்கமற்றவனாக ; திரியேல் - அலையாதே.

---

## ௬. விகருணன் நல்லவன்

துரியோதனனும், அவனுடைய உடன் பிறந்தவர்களும் மிகவும் கொடியவர்கள். எப்பொழுதும் பிறருக்குத் தீமை புரிவதில்தான் அவர்களுக்கு நோக்கம். அந்தத் தீய குணத்திஞல் அவர்கள் பலராலும், 'மிகப் பொல்லாதவர்கள்' என்று பழித்துரைக்கப்பட்டனர். துரியோதனனுடைய பெயரையும், அவனுடைய தம்பியர்கள் பெயரையும் கேட்ட அளவில்தானே மக்கள் அனைவரும் மிகுந்த வெறுப்படைவார்கள். அந்தப் பொல்லாதவர்களுடைய கூட்டத்திலே நல்லவன் ஒருவன் இருந்தான். அவனுடைய பெயர் விகருணன்.

விகருணனிடத்திலே மட்டும் எத்தகைய தீய குணங்களும் இல்லை. தன்னுடைய அண்ணன் முதலிய உடன் பிறந்தவர் செய்பவைகளெல்லாம் மிகவும் இழிவானவை என்று நன்கு உணர்ந்திருந்தான். பல சமயங்களில் தன் உடன் பிறந்தார்களுக்கு அறவுரைகளும் பல கூறிஞன். ஆஞல், அவைகளை, அவனுடைய உடன்பிறந்தார்கள் சிறிதுங் கேட்காமல், விகருணனையே இகழ்ந்துரைத்தார்கள்.

விகருணனுக்கு அவன் உடன் பிறந்தவர்களால் சிறப்பேற்படவில்லை. எனினும் பிற பெரியோர்கள் அனைவரும் விகருணனுடைய நல்லியல்பைப் பெரிதும் பாராட்டிஞர்கள். விகருணனுக்கு 'நல்லவன்' என்று பெயர் கொடுத்தார்கள். கொடியவர்களுடன் பிறந்திருந்தும் விகருணன் நல்லவஞக விளங்கியதை உலகினர் இன்றும் புகழ்ந்து கொண்டாடுகிறுர்கள். ஆத

லின் ஒவ்வொருவரும் நல்லவர்களாக இவ்வுலகில் இருக்கவேண்டியது இன்றியமையாததாகும்.

"தக்கோன் எனத்திரி"

(இ - ள்) தக்கோன் என - பெரியோர்கள் உன்னை நல்லவனென்று கூறுமாறு; திரி - நடந்துகொள்வாயாக.

---

## ரு. வறுமையிற் செம்மை

ஒருநாள் ஓர் ஊருக்கு ஒரு பெரியவர் வந்தார். அவர் எல்லா ஆற்றல்களும் இனிது அமையப் பெற்றவர். அந்த ஊரிலே அருள் தங்கிய உள்ள முடையவர்கள் எத்தனை பேர் என்று ஆராய்ந்தறிந்து அவர்கட்கெல்லாம் செல்வம் பெருகுமாறு திருவருள் செய்ய எண்ணினார்.

ஊரினர் சிலரைக் கண்டு தமக்குச் சிறிது பொருள் உதவ வேண்டுமென்றும், உணவு உடை முதலியன அளிக்கவேண்டும் என்றும் கேட்டார். ஊரினர் பெரியவரைப் போற்றவில்லை. பெரியவர் ஒரு பொய்க்கோலத் துறவி என்று எண்ணினர். உணவுகூட அளிக்கவில்லை. அனைவருந் தத்தமது இவறன்மைக் குணத்தையே மிகுதியாகக் காட்டினார்கள். இறுதியிற் பெரியவர் ஒரு வறியவனிடஞ் சென்றார். "எனக்கு எதாவது உதவி செய்வாயாக!" என்று கேட்டார்.

அவ் வறியவன் அன்றாடக் கூலிவேலை செய்து பிழைப்பவனாகவிருந்தும் பெரியவரைப் போற்ற விரும்பினான். தன் நண்பன் ஒருவனிடஞ் சென்று

சிறிது பொருள் கடன் பெற்ருன். பெரியவருக்கு உணவிட்டான். நல்ல வேட்டி யொன்று வாங்கிக் கொடுத்தான். "வழிச்செலவுக்கு வைத்துக்கொள் ளுங்கள்," என்று கூறிச் சிறிது பொருளுங் கையில் கொடுத்தான்.

பெரியவர் வறியவனுடைய செயலைக் கண்டு உள் ளம் மகிழ்ந்தார். அவர் வறியவனைப் பார்த்து, "உனக்கு எல்லா நலன்களும் இனிதுண்டாவதாக!" என்று வாழ்த்துரை வழங்கிச் சென்ருர். அவ்வாழ்த் துரையின் பலனுக வறியவன் விரைவிற் செல்வனு ஞன்.

செல்வனுன பின்னரும் தன்மனந் திரியாதிருந்து அறங்களிலே ஈடுபட்டான். பெரியவரைப் போற்ருத மற்றவர்கள் நாளடைவில் வறுமையை அடைந்து வருந்திஞர்கள். "தாங்கள் வறுமையை அடைந்த தற்குக் காரணம், உணவும் உடையும் கேட்ட பெரிய வரைப் போற்ருததேயாகும்," என்பதை அவர்கள் விரைவில் உணர்ந்தனர். தங்களின் அறியாமைச் செயலை எண்ணி எண்ணி வருந்தினர். ஆகையால், ஒவ் வொருவரும் நல்வழியிற் பொருளைச் செலவு செய்தல் வேண்டும்.

## "தானமது விரும்பு"

(இ - ள்.) தானம் - நல்வழியிலே பிறருக்குப் பொருள் கொடுத்தலை, விரும்பு - நீ நாடுவாயாக ! அது : பகுதிப் பொருள் விகுதி.

## கூ. பெரும்பூதூர் உடையவர்

பெரும்பூதூர் என்னும் ஊரிலே உடையவர் என்று பெயருடையவர் ஒருவர் முன்னாளில் இருந்தார். அவர் பேரறிவும் நல்லொழுக்கமும் அமையப் பெற்றவராக இருந்தார். மறை முதலிய நூல்களை ஓதியுணர்ந்தமையின், அவர் திருந்திய மனநலம் பொருந்தியவராக இருந்தார். திருக்கோட்டியூர் நம்பி, திருமலை நம்பி, திருக்கச்சி நம்பி, பெரிய நம்பி முதலிய திருமாலடியார்களை அவர் போற்றி வழிபட்டமையின் அவருடைய உள்ளமும் திருமாலை நாடியது. அதனால் நாளும் அப் பெருமானை வழிபட்டு நின்றார்.

பெருமாளைத் தாம் போற்றியதோடமையாது மற்றவர்களையும் போற்றுமாறு செய்தார். அதனால் திருமாலைப் போற்றும் அன்பர்கள் கூட்டம் மிகுதிப் பட்டது. பலருக்கும் உடையவர் ஆசிரியரானார். உடையவரின் பெருமை உலகிலே உயர்ந்தது. நாடெலாம் திருமாலைப் போற்றி நன்மையை அடைந்தது.

உடையவர் திருமாலைப் போற்றியபடியால் உலகத்திற்கும் நன்மையை உதவித் தாமும் நன்மையைப் பெற்றார். அவரை இன்றும் உலகம், 'எம்பெருமானார்' என்றும், 'இளையாழ்வார்' என்றும் 'பாடியகாரர்' என்றும் போற்றி வழிபடுகின்றது. அக்காலவுலகில் நிகழ்ந்த திருமாலைப் போற்றுதல் ஔவையார் காலத்தில் சிறிது குறைவுபட்டதாகையால் இவ்வாறு, 'திருமாலுக் கடிமை செய்' என்று கூறியருளினார்.

"திருமாலுக் கடிமை செய்"

(இ-ள்) திருமாலுக்கு - விட்டுணுவுக்கு; அடிமை செய் - தொண்டு செய்வாயாக.

## எ. தன்வினை தன்னைச் சுடும்

பஞ்சபாண்டவர் காலத்திலே அத்தினபுரியை அடுத்து ஒரு காடு இருந்தது. அந்தக் காட்டிலே ஒரு முனிவர் இருந்தார். அவருடைய பெயர் காளமுனிவர். அவர் முனிவராக விளங்கியிருந்தும் தீச்செயல்கள் பல வற்றைச் செய்து திரிந்தார்.

தீவினை செய்தலையே தன்னுடைய தொழிலாகக் கொண்டிருந்த துரியோதனன் அம் முனிவரைக் கொண்டு பாண்டவர்களைக் கொல்ல விரும்பினான். முனிவரை அழைத்தான். தன்னுடைய எண்ணத்தை அவரிடம் கூறினான். அம் முனிவர் முதலில் மறுத்தார்; பிறகு துரியோதனன் விரும்பியவாறே செய்வதாக ஒப்புக்கொண்டார். காட்டையடைந்து கொடிய வேள்வி ஒன்றைச் செய்தார்.

வேள்வியிலிருந்து நெடிய பூதம் ஒன்று எழுந்தது. அப் பூதத்தைப் பார்த்து "ஐவரையும் கொன்று வா" என்று கட்டளையிட்டார். பூதம் விரைந்து சென்றது. பாண்டவர்களில் நால்வர் மாயவனருளால் மாண்டு கிடந்தார்கள். தருமர் ஒருவர் மட்டும் இறவாதிருந்தார். இறந்தவர்களைக் கண்ட பூதம் மிகுந்த சினமடைந்தது. தன்னை அனுப்பிய காளமுனிவர்பால் மீளவுஞ் சென்றது. "ஓ அறிவற்றவனே! இறந்தவர்கள் மீது என்னை யனுப்பினாயே; மனிதர்கள் பல முறை சாவார்களோ?" என்று கூறிக் காளமுனிவர் மாளுமாறு அறைந்துவிட்டுச் சென்றது; ஐவரை யழிக்க நினைந்த முனிவர் தாமே அழிந்தொழிந்தார். பிறருக்குத் தீமை செய்ய எண்ணினால், அத் தீமை

தனக்கே வரும். ஆகையால் மற்றவர்களுக்குத் தீமை செய்தற்குச் சிறிதும் எண்ணுதல் கூடாது.

" தீவினை யகற்று "

(இ - ள்.) தீவினை - தீயசெயல்களை, அகற்று - செய்யாமல் ஒழிப்பாயாக !

---

## அ. பெருந் திருமாவளவன்

திருமாவளவன் என்னும் மன்னன் ஒருவன் முன்னாளில் உறையூரில் இருந்து அரசு செலுத்திக்கொண்டிருந்தான். அவன் ஆற்றலும், சூழ்ச்சியும் ஒருங்கே அமையப் பெற்றவன். அவனுக்குப் பகைவர்கள் பலர் ஏற்பட்டார்கள். அடிக்கடி பல தொல்லைகளைச் செய்துகொண்டிருந்தார்கள்.

திருமாவளவன் இளைஞனாக இருந்தாலும் எதற்கும் கலங்காத திண்ணிய மனமுடையவனாக இருந்தான். பகைவர்களுடைய தொல்லைகளை அவன் ஒரு பொருட்படுத்துவதில்லை. அறிவையும், ஆண்மையையும் ஒன்றாகச் செலுத்திப் பகைவர்கள் அனைவரையும் எளிதாகத் தோற்கடித்தான். திருமாவளவனுடைய பெயரைக்கேட்ட அளவில்தானே, பகைவர்கள் அஞ்சி நடுங்கி அலறினார்கள்.

பகைவர்கள் செய்த துன்பத்தை எதிர்த்துப் போராடியதனால் வெற்றியடைந்த திருமாவளவன் பெருந்திருவடைந்து பெற்றியிற் சிறந்து விளங்கினான். அதனால் அவனுடைய பெயர் பெருந்திருமாவளவன் என நீண்டு நின்றது; அவன் சங்கப் புலவர்களுடைய புகழ் மொழிகளையும் பெற்றுச் சிறந்து விளங்கினான்.

துன்பத்திற்கு இடங்கொடாமல் அதனை எதிர்த்துப் போராடி வெற்றி பெறுபவர்களே உலகில் உயர்ந்து திகழ்வார்கள் என்பதற்குப் பெருந்திருமாவளவனே பொருந்திய சான்ருக அமைந்து திகழ்ந்தான். ஆகவே நாம் துன்பங்களை அடையும்பொழுது அதன்பொருட்டு அஞ்சிக் கலங்காமல் அவற்றை எதிர்த்து நின்ருல், அவைகளைக் கெடுத்து நன்மையைப் பெறலாம். துன்பத்திற்கு அஞ்சிக் கலங்குவோர் அந்தத் துன்பத்திலுலேயே அழிந்தொழிந்துபோவார்கள்.

" துன்பத்திற் கிடங்கொடேல் "

(இ - ள்.) துன்பத்திற்கு - வருத்தத்திற்கு; இடங்கொடேல் - நீ சிறிதும் இடங்கொடுக்காதே.

---

## ௪. இடுக்கணில் சிக்கிய இருவர்

கடற்கரை ஒன்றிலே ஒரு குன்று இருந்தது. அந்தக் குன்று கடலின் பக்கத்தில் சரிவாக இல்லாமல் நேர் செங்குத்தாக இருந்தது. அந்தப் பகுதியில் ஒரு பெரிய மரப்பெட்டி யொன்று கடல் அலையில் வந்து ஒதுங்கியிருந்தது. மலைக்கும் கடலுக்கும் இடையில் நாலைந்தடி தொலையே இருந்தது.

ஒதுங்கியிருந்த மரப்பெட்டி கவிழ்ந்துபோன கப்பல் ஒன்றிலிருந்து வந்தது. அதற்குள் ஆடைகளும் அணிகலன்களும் இருந்தன. அப் பெட்டி ஒதுங்கியிருந்தவிடத்திற்கு யாரும் செல்ல முடியாது. சுற்றுவழிகளிலும் காடும் பள்ளமுமாகவே யிருந்தன. குன்றின் உச்சிக்கும் பெட்டிகிடந்த அடிவாரத்திற்கும் இரண்டு மூன்று பனைமர உயரமிருக்கலாம்.

ஒருநாள் குன்றின் உச்சிக்குச் சென்ற இருவர் அந்தப் பெட்டியைக் கண்டார்கள். அதிலுள்ள பொருள்கள் இன்னவை என்று அவர்கள் அறியார் களாயினும், அப் பெட்டியை எடுத்துப் பார்க்க எண்ணினார்கள். ஊருக்குள் சென்று நீண்ட கயிறு முதலியன கொண்டுபோய் அந்தப் பெட்டியை எடுக்க முயற்சி செய்யவில்லை. சில கொடிகளைப் பிடுங்கி நீள மாக முடிந்து ஒரு மரத்திலே கட்டிவிட்டு அந்தக் கொடியைப் பிடித்துக்கொண்டு இருவரும் இறங்கி னார்கள்.

ஒவ்வொருவராக இறங்காமல் இருவரும் ஒன் ருகவே விரைந்து இறங்கி அடிவாரத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள். பெட்டி பூட்டப் பெற்றிருந்தபடியால், திறக்க முடியவில்லை. அதனை மேலே கொண்டு போய்த் திறந்து பார்க்கலாமென்று முடிவு செய்து, கொடியில் கட்டிவிட்டு இருவரும் ஒன்ருகவே மேலேறி னார்கள். பாதி உயரம் போவதற்குள் கொடியின் முடிச்சு நழுவிக் கழன்று கீழே விழுந்தது. இருவரும் கீழேபோய் விழுந்தார்கள். இருவருக்கும் நல்ல காயம் ஏற்பட்டது.

மக்களின் நடமாட்டம் அற்ற அந்த இடத்திலே இரண்டொருநாள் கிடந்து கூச்சலிட்டு இறந்து போனார்கள். ஆராயாமற் செய்கிற காரியங்களால் இத்தகைய பலன்தான் ஏற்படும்.

### "தூக்கி வினைசெய்"

(இ - ள்.) தூக்கி - முடிக்குஞ் சூழ்ச்சியை ஆராய்ந்தறிந்து; வினைசெய் - அதன் பின் ஒரு காரியத்தைச் செய்வாயாக.

---

## ௧௦. உலகப்பனும் மாணிக்கமும்

ஒரு சிற்றூரிலே அங்காளம்மன் கோயில் ஒன்று இருந்தது. அந்தக் கோயிலிலே வீரபத்திரர், இருளப்பர், கறுப்பர் முதலிய சிறு தேவதைகளின் உருவங்கள் செய்துவைக்கப் பெற்றிருந்தன. அவற்றுள் வீரபத்திரரின் உருவம் அச்சம் உண்டாக்கத் தக்கவாறு செய்யப்பட்டிருந்தது.

ஒருநாள் இரண்டு நண்பர்கள் அந்தக் கோயிலுக்குச் சென்றூர்கள். அவர்களில் ஒருவன் பெயர் உலகப்பன்; மற்றவன் பெயர் மாணிக்கம். உலகப்பன் நீராடாமல் வந்திருந்தான். மாணிக்கம் உலகப்பனேப் பார்த்து, "அடே உலகப்பா! அதோ அந்த வீரபத்திரரைப்பார்; அவர் மிகவும் அஞ்சத் தக்கவாறு விளங்குகிறூர். நீராடாமல் வந்திருக்கும் உன்னே அவர் அடித்துவிடப்போகிறூர்," என்று விளேயாட்டாகக் கூறிஞன்.

மாணிக்கம் கூறியதைக் கேட்டு உலகப்பன் அஞ்சிவிட்டான். ஆயினும், அவன் தன்னுடைய அச்சத்தை வெளிக்குக் காட்டிக்கொள்ளவில்லே. "இந்தப் பொம்மைச் சாமியால் என்ன முடியும்? நான் அந்தச் சாமி மண்டையை உடைத்துத் தூளாக்கிவிட மாட்டேஞ?" என்று துடுக்காகப் பதிலுரைத்தான். இருவரும் வீட்டுக்குத் திரும்பிஞர்கள். நள்ளிரவாகி விட்டது. உலகப்பனுக்கு முன்ஞல் என்னவோ திடீரென்று பாய்ந்தோடியதுபோல் இருந்தது. அவன் அஞ்சிப் பொத்தென்று கீழே விழுந்துவிட்டான்.

மாணிக்கம் உலகப்பனேத் தூக்கிக்கொண்டுபோய் வீட்டிற் சேர்த்தான். உலகப்பனுக்குக் கடுமையான

காய்ச்சல் வந்துவிட்டது. வீரபத்திரர் தன்னை அடிக்க வருவதைப் போலக் கனவுகண்டு அஞ்சியலறினான். அவனுடைய காய்ச்சல் தணிவதற்கு ஒரு திங்களாயிற்று. அதுமுதல் உலகப்பன் தெய்வங்களைப் பழித்துரைக்கும் வழக்கத்தை விட்டுவிட்டான்.

**" தெய்வ மிகழேல் "**

(இ - ள்.) தெய்வம் - கடவுளை; இகழேல் - பழித்துரைக்காதே.

---

## கக. புதுமையான மனிதர்

ஓர் ஊரிலே ஒரு செந்தமிழ்ப் புலவர் இருந்தார். அவர் பன்னூல்களையும் பழுதறப் பயின்று சிறந்து விளங்கினார். அவர் பேரறிவு பொருந்தியவராக இருந்தும் உலகத்தினரோடு ஒட்ட ஒழுகும் திருந்திய பண்பு பொருந்தியவராக இல்லை. எந்தச் செயலைச் செய்தாலும் மற்றவர்கள் செய்வதற்கு மாறுபாடாகவே அவர் செய்வார். தமக்கு அண்மையில் வாழ்ந்திருக்கும் மக்களோடு பழகமாட்டார். எப்பொழுதுந் தனித்தவராகவே இருப்பார். யாராவது அவரைப் பார்க்கச் சென்றால், அவர்களோடு மனம்பொருந்திப் பேசமாட்டார். தந்தியடித்தாற் போல இரண்டொரு மொழிகளைப் பேசி அனுப்பிவிடுவார்.

அவரைப் பார்க்கச் சென்றவர்கள் எழுந்து செல்லாமல் உட்கார்ந்திருந்தால், " ஏன் உட்கார்ந்திருக்கிறீர்கள்? போய்விட்டு வாருங்கள்," என்று கூறி அனுப்பிவிடுவார். ஒருமுறை அவரிடஞ் சென்றவர்கள் மறுமுறை செல்லமாட்டார்கள். அப் புலவர்

கோயில் முதலிய இடங்கட்குச் செல்லவேண்டுமானுல், யாருஞ் செல்லாத சமயமாகப் பார்த்துத்தான் செல்லுவார். எதிர்பாராதவாறு யாரேனும் தோன்றி ஏதேனும் பேசினுல், தக்கவாறு பதிலளிக்கமாட்டார். ஊமையைப் போலப் பேசாது செல்வார். இத்தகைய இயல்பு வாய்ந்த புலவரின் பெயர் **மாசிலாமணிப்புலவர்.**

மாசிலாமணிப் புலவர் நூல்கள் பல எழுதியிருந்தார். அந்த நூல்கள் நன்ருக அமைந்திருந்தன. அதனுல் மாசிலாமணிப் புலவருடைய பெயர் பலவிடங்களிலும் பரவியிருந்தது. பல்கலைக் கழகம் ஒன்றிலே மாசிலாமணிப் புலவரைத் தமிழ்ப் புலவராக ஏற்படுத்திஞர்கள். முதலிற் புலவர் அந்த வேலையை வேண்டாம் என்று மறுத்துவிடலாமென்று எண்ணிஞர். அவ் வேலைக்குத் திங்கள் ஊதியம் ரூபா முந்நூருகலின் அதனை விடக்கூடாது என்று பிறகு துணிந்தார். வேலையை ஒப்புக்கொண்டு பார்க்கத் தொடங்கிஞர். யாரோடும் நெருங்கிப் பழகாத அவருடைய பழக்கம் அங்குந் தொடர்ந்தது.

மணியடித்தவுடன் வகுப்புக்குள் நுழைவார். பாடம் முடிந்தவுடன் எழுந்து விரைந்து சென்றுவிடுவார். எவரேனும் ஐயமானவைகளைப் பற்றிக்கேட்டால் அவைகட்கு மட்டும் பதிலளித்துவிட்டுப் பறந்துவிடுவார். ஆசிரியர்கள் இளைப்பாறும் அறைகட்கு அவர் செல்லமாட்டார். எங்கேனும் ஒதுக்கிடங்களில் தங்கியிருப்பார். பல்கலைக் கழகத்திற்குள் அவரைப் பார்ப்பதுகூட அருமையாக விருந்தது.

மாணவர்கள் நல்லவர்களையே கிண்டல் செய்யும் அறியாமைப் பண்பு பொருந்தியவர்கள். அவ்வாருக

மாசிலாமணிப் புலவர் போன்ற தனிப்பட்ட குண முடையவர்களை விட்டுவிடுவார்களா? 'சுடுமூஞ்சி' என் றும், 'முசுடு' என்றும், 'வியப்புடைப் பிறவி' என்றும் 'கொம்பு முளைத்த தம்பிரான்' என்றும் பல பெயர்களிட்டுப் பகடி செய்தார்கள். பிற ஆசிரியர்களும் மாணவர் களோடு சேர்ந்துகொண்டார்கள். மாசிலாமணிப் புலவருக்கு நாளடைவில் தொல்லை மிகுதியாயிற்று. அவர் தமக்கு ஆசிரியத் தொழில் வேண்டாமென்று கூறி வெளியேறிவிட்டார். தனிப்பட்ட இயல்புடைய வர்கள் இவ்வாறு தான் பிறரால் பழிக்கப்படுவர்.

### " தேசத்தோ டொத்துவாழ் "

(இ - ள்.) தேசத்தோடு - வாழ்ந்திருக்கும் நாட்டில் உள்ள வர்களுடனே; ஒத்து - மனம் பொருந்தி; வாழ் - நீ வாழ்ந்திருப்பா யாக.

---

## கஉ. பயறுகேட்ட பார்ப்பனன்

இராமபிரான் அயோத்தியில் அரசாட்சி செய்து கொண்டிருக்குங் காலத்திலே ஓர் ஊரில் ஒரு பார்ப் பனன் இருந்தான். அவனுடைய மனைவி மிகவுங் கொடியவள். அவள் தான் சொன்னவாறே நடக்கு மாறு தன் கணவனை ஆட்டிவைத்துக்கொண்டிருந் தாள். தான் கூறியதைக் கேட்காவிடின் சமயத்தில் கணவனை அடித்தும் விடுவாள்.

பார்ப்பான் அவளுக்கு அடிமையாக அமைந்து காலந்தள்ளிக்கொண்டிருந்தான். அப்போது அயோத் தியில் குதிரைவேள்வி (அசுவமேத யாகம்) நடைபெற் றது. இராமபிரான் வேண்டிய வேண்டியாங்கு இர

வலர்களுக்குப் பொருள் வழங்கினார். அச் செய்தி பார்ப்பனனுக்குத் தெரிந்தது. அச் செய்தியைத் தன் மனைவிக்குக் கூறித் தானுஞ் சென்று வருவதாக வேண்டிக்கொண்டான். பார்ப்பனி, 'சென்று வா' என்று உடன்பாடு தெரிவித்தாள். தான் இராம பிரானிடத்திலே எப் பொருளினைக் கேட்டுப் பெற்று வருதல் வேண்டும் என்று கேட்டான் பார்ப்பனன்.

பார்ப்பனி, அப் பேதைப் பார்ப்பனனைப் பார்த்து, "நீ இராமபிரானைக் கண்டால், அகல நின்று பல்லைக் காட்டிக்கொண்டிராதே. கஞ்சி வைப்பதற்குக் கலப்பயறு வேண்டுமென்று கேட்டு வாங்கிக்கொண்டு வா. வேறொன்றையுங் கேட்காதே," என்று கூறி யனுப்பினாள். அப் பேதைப் பார்ப்பான் அயோத் தியை அடைந்தான். இராமபிரான் பேதைப்பார்ப் பானைக் கண்டார். அவனைப் பார்த்த அளவில் அவனுடைய வறியநிலைமை நன்கு புலனாகியது. மிகுந்த பொருளும் ஆக்களும் அளித்தார்.

பார்ப்பான் அவைகள் தனக்கு வேண்டாமென்று மறுத்தான். "வீட்டில் கஞ்சி வைத்தற்கு யாதுமில்லை; கலப்பயறுதான் வேண்டும்," என்று வேண்டிக்கொண் டான். அவன் அவ்வாறு கேட்டதற்குக் காரணம் யாதென்று இராமபிரான் கேட்டார். "என்னுடைய மனைவியின் கட்டளை பயறு வாங்கிக்கொண்டு வர வேண்டுமென்பதுதானே தவிரப் பொருள் வாங்கிக் கொண்டு வரவேண்டும் என்பது அன்று. நான் அவள் கட்டளையை மீறி இவைகளை வாங்கிக்கொண்டு செல் வேனேயானால், என்னை அவள் துன்புறுத்துவாள். ஆகையால் நான் இவைகளை ஏற்றுக்கொள்ள முடி யாது," என்று கூறினான்.

அங்குக் கூடியிருந்தவர்கள் அனைவரும் பேதைப் பார்ப்பானுடைய மடமையையும், அவன் மனைவிக்கு அஞ்சி நடத்தலையும் எளிதில் உணர்ந்துகொண்டு, எள்ளி நகையாடினார்கள். அப் பார்ப்பான் தன் மனைவி சொல்லைக் கேட்டு நடந்தபடியால், எல்லோருக்கும் முன்பு மிகுந்த இழிவையடைந்தான். ஆகையால் எவரும் மனைவி சொல்லைக்கேட்டு அதன்படி நடத்தல் கூடாது.

"தையல்சொற் கேளேல்"

(இ-ள்.) தையல் - மனைவியுடைய; சொல் - சொல்லை; கேளேல் - கேட்டு அதன்படி நடவாதே.

---

## ௧௩. அறிஞரின் பழமை நட்பு

மாபெரும் புலவராகிய மீனாட்சிசுந்தரம்பிள்ளை, ஒருநாள் தம் மாணவர் பலரோடு வழிநடந்து சென்று கொண்டிருந்தார். அப்போது எதிரே ஒரு கிழ மனிதன் மூட்டையோடு வந்துகொண்டிருந்தான். அந்தக் கிழவன் மீனாட்சிசுந்தரம்பிள்ளையைக் கண்டவுடன், "மீனாட்சிசுந்தரம்! நலமாக இருக்கிறாயா?" என்று நன்மை உசாவினான்.

அப்போது உ. வே. சாமிநாதையர் முதலிய பல மாணவர்கள் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களோடு சென்றுகொண்டிருந்தனர். அவர்கள் ஒரு கிழவன் தம் ஆசிரியரைப் பெயர் சொல்லி அழைத்ததையும், ஆசிரியர் அதற்குச் சினந்துகொள்ளாமல் அக்கிழவனோடு பேசிக்கொண்டிருப்பதையுங் கண்டு வியப்படைந்தார்கள்.

அக்கிழவன் சென்ற பிறகு அவர்கள் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்களைப் பார்த்து, "இந்தக் கிழவர் யார்? தங்களைப் பெயர் சொல்லி அழைத்தாரே, தங்களைப் பெயர்சொல்லி அழைத்துப் பேசியவர்களை நாங்கள் இதுவரையிற் பார்த்ததில்லையே?" என்று கேட்டார்கள்.

அதற்கு மீனாட்சிசுந்தரம்பிள்ளை, "இவர் சிறு பருவத்தில் என்னுடன் பள்ளிக்கூடத்திலே கல்வி பயின்றுகொண்டிருந்தவர். பள்ளிக்கூடத்தை விட்ட பிறகும் என்னோடு சிலகாலம் படித்துக்கொண்டிருந்தார். பிறகு குடும்பத் தொல்லையால் மேற்கொண்டு படிப்பதை நிறுத்திவிட்டார். பழைய நண்பராகையால் கண்டால் இவ்வாறுதான் பேசுவார். அதில் தவறென்ன?" என்று கேட்டார். பிள்ளையவர்களின் தொன்மைமறவாக் குணம் போற்றத்தக்கதன்றோ?

**"தொன்மை மறவேல்"**

(இ - ள்.) தொன்மை - பழமையாகிய நட்பை, மறமேல் - மறந்துவிடாதே.



## ௧௬. பொய்வழக்காடிய அங்கமுத்து

சேரனூர் என்னும் ஊரிலே அங்கமுத்து என்பவனும் தங்கமுத்து என்பவனும் ஆருயிர் நண்பர்களாக விளங்கினார்கள். நாளடைவில் நட்பு முதிர்ந்து பகையாக மாறிவிட்டது. இருவருக்குந் தொடங்கிய வாய்ப்போர் வளர்ந்து நாளடைவில் கைப்போராகவும் மாறிவிட்டது. அங்கமுத்து நல்ல உடற்கட்டும், ஆற்றலும் அமைந்தவன். தங்கமுத்துவைப் பிடித்து நன்றாக அடித்துவிட்டான். அவனுடைய கை முறிந்துவிட்டது.

அங்கமுத்து தானே தங்கமுத்துவின்மேல் வழக்குப் போட்டான். தன் வழக்குத் தோற்றுப் போகுமென்பதையுணர்ந்திருந்தும் தான் முந்திக்கொண்டால் தண்டனை சிறிது குறையாதா? என்று பார்த்தான். ஆனால், அங்கமுத்து எதிர்பார்த்தபடி தண்டனை குறையவில்லை. ஊரார்கள் அனைவரும் தங்கமுத்துவின் பக்கமாகவே சாட்சி கூறினார்கள். நீதிமன்றத் தலைவர் அங்கமுத்து தங்கமுத்துவை அடித்துக் கையை ஒடித்ததும் அல்லாமல் பொய் வழக்குந் தொடர்ந்ததாகச் சொல்லித் தண்டனையை இரட்டிப்பாக ஏற்படுத்தினர்.

தண்டனை மிகுதிப்பட்டதைக் கண்ட அங்கமுத்து, நமக்கு நாமே தொல்லையை மிகுதிப்படுத்திக்கொண்டோமே என்று கூறி வருந்தினான். ஆகையால் எவருந் தோல்வியடையக் கூடிய வழக்குகளிலே ஈடுபடக் கூடாது.

**"தோற்பன தொடரேல்"**

(இ - ள்.) தோற்பன - தோல்வியடையக் கூடிய வழக்குகளிலே; தொடரேல் - ஈடுபடாதே.

---

## ௧௫. பேகனும் பெருமாளும்

பூந்துறை என்னும் ஊரிலே உடன்பிறந்தார்கள் இருவர் இருந்தனர். அவர்களில் மூத்தவன் பெயர் பேகன். இளையவன் பெயர் பெருமாள். பேகன் இளமைப் பருவத்திலே பள்ளிக்கூடத்திற்கு ஒழுங்காகச் சென்று கல்வி கற்கவில்லை. பெருமாள் கல்வியை ஒழுங்காகக் கற்று அறிவுள்ளவன் ஆனான். பேகனும் பெருமாளும் உடன்பிறந்தவர்களாக இருந்தும் அறிவின் சிறப்பினாலே பெருமாள் சிறந்து விளங்கினான். பேகன் சிறப்படையவில்லை. பேகன் தீய காரியங்களையே பற்றிக்கொண்டிருந்தான். பிறருக்குத் தீமை செய்தல், பொய்புகலுதல், வஞ்சனைகள் செய்தல் முதலிய தீக் குணங்கள் பேகனிடம் குடிகொண்டன.

பெருமாள் அனைவரிடத்திலும் அன்பும் அருளுஞ் சிறந்து விளங்கினான். வறியவர்கட்குந் துன்பப்பட்டவர்களுக்கும் தகுந்த உதவி புரிந்தான். மற்றும் நன்மையான செயல்கள் எல்லாவற்றையும் தனக்கு உரிமையாக மேற்கொண்டிருந்தான்.

பூந்துறை ஒரு சிற்றூர். அவ்வூர்த் தலைவனாக இருந்தவன் இறந்துபோனான். அவ்வலுவலைப் பெறுதற்குப் பலரும் முயன்றனர். அத்தலைமை வேலை செல்வர்களாகவும் நல்லவர்களாகவும் உள்ளவர்கட்குத் தான் கிடைக்கும். பேகன் செல்வமுடையவன் தான். அதனால் அவன் ஊர்த் தலைவனாக வருதற்குப் பெரிதும் முயன்றான். எவ்வளவோ முயன்றும் அவ் வேலை அவனுக்குக் கிடைக்கவில்லை. அவ்வேலையைக் குறித்து எத்தகைய முயற்சியுமே செய்யாதிருந்த

வனும், நல்லவனுக விளங்கியவனுமாகிய பெருமா ளுக்கே அவ்வேலை தானுக வந்துசேர்ந்தது. ஆகையால், ஒவ்வொருவரும் நன்மையைக் கடைபிடித் தொழுகு தல்தான் சிறப்பைக் கொடுக்கும்.

"நன்மை கடைப்பிடி"

(இ - ள்.) நன்மை - நல்ல செயல்களைச் செய்வதையே; கடைப்பிடி - உறுதியாகப் பற்றிக்கொள்.

---

## கக. புதுமை மருத்துவம்

குவளைக்குளம் என்னும் ஒரு சிற்றூரிலே நாகமணி என்னும் பெயருடையவன் ஒருவன் முற்காலத்திலே இருந்தான். அவனுடைய உடலிலே நல்ல ஆற்றல் இருந்தது. இளமையின் துடிப்பும் அவன் உள்ளத்தை அளவுகடந்து ஊக்கிற்று. எல்லோருஞ் செய்கிற காரியங்களுக்கு எதிரிடையாகவே இருக்கும் நாகமணி யின் காரியங்கள்.

நாகமணி இயற்கையறிவோ, கல்வியறிவோ உடையவன் அல்லன். 'இளங்காளை பயமறியாது' என்பதற்கேற்ப இளமையின் மிடுக்கால் எதற்கும் அஞ்சாது அறிவற்ற காரியங்களையே அவன் செய்து திரிந்தான். அதனுல் ஏற்படுகிற தீமைகளையும் நாகமணி ஒரு பொருட்படுத்துவதில்லை.

நாகமணியின் தந்தைக்குக் கடுமையான காய்ச்சல் நோய் கண்டிருந்தது. பல மருந்துகளைக் கொடுத்துப் பார்த்தும் நோய் தணியவில்லை. காய்ச்சலின் கடுமை மிகக் கொடுமையாக இருந்தது. நாகமணி தந்தையின்

உடம்பில் கையை வைத்துப் பார்த்தான். சூடு தாங்க முடியவில்லை. நோயாளியோ பலவாறு புலம்பினான்.

நாகமணி ஒரு கணம் எண்ணமிட்டான். சுடுகிற பொருள்களின்மீது குளிர்ந்த தண்ணீரை ஊற்றினால், குளிர்ச்சியை அடைகிறது. காய்ச்சலைத் தண்ணீரினால் ஏன் நீக்கக்கூடாது என்று எண்ணினான். தந்தையைத் தூக்கிக்கொண்டுபோய்க் குளிக்கும் இடத்தில் வைத்து இரண்டு குடந் தண்ணீரைத் தலையில் ஊற்றினான். உலர்ந்த துணியால் ஈரத்தைத் துவட்டிவிட்டான். இந்தப் புதுமையான மருத்துவத்தால் உடலில் குளிர்ச்சி பிறந்தது. நாகமணியின் தந்தை மிக விரைவில் இறந்துவிட்டான். ஊரார்கள் பலரும் நாகமணியைப் பலவாறு இகழ்ந்துரைத்தார்கள். தான்மட்டும் புதுமையாக ஒரு வேலையைச் செய்தால் இகழ்ச்சி நேரிடுவது திண்ணம்.

## "நாடொப்பன செய்"

(இ - ள்.) நாடு - நாட்டிலே உள்ளவர்கள் பலரும்; ஒப்பன - ஒப்புக்கொள்ளத்தக்க செயல்களை; செய் - நீ செய்வாயாக!

---

## ௬எ. தருமரும் நடுவுநிலைமையும்

பஞ்சபாண்டவர்களில் முதல்வராகிய தருமர் எந்தச் சமயத்திலும் நடுவு நிலைமையினின்றும் தவறாத உயர்ந்த கொள்கையை மேற்கொண்டிருந்தார். பாண்டவர்கள் காட்டிலே தங்கியிருந்தபோது, புருட மிருகம் என்னும் ஒரு விலங்கிற்கும் வீமனுக்கும் ஒரு போட்டிப் பந்தயம் ஏற்பட்டது. இருவரும் ஓரிடத்தில் நின்று மற்றோர் இடத்திற்கு ஓடுவதென்றும் அவ்வாறு ஓடுவதில் வீமன் புருட மிருகத்தின் மார்பைத் தொட்டு விட்டு ஓடுவதென்றும், குறிப்பிட்ட இடத்தை அடைவதற்குள் புருடமிருகம் வீமனைப் பிடித்துவிட்டால் வீமன் புருடமிருகத்திற்கு இரையாக வேண்டும் என்றும், அவ்வாறு பிடிக்காவிட்டால், புருடமிருகம் வீமனுக்கு அடிமையாவதென்றும் முடிவாயிற்று.

வீமன் புருடமிருகத்தின் மார்பைத்தொட்டுவிட்டு விரைவாக ஓடினான். புருடமிருகம் அவனைத் துரத்திக் கொண்டு ஓடியது. 'வீமன் குறிப்பிட்ட எல்லையை நெருங்கிவிட்டான். எல்லையின் இந்தப் பக்கத்தில் ஒருகாலும் அந்தப் பக்கத்தில் ஒரு காலுமாக இருக்கும்போது புருடமிருகம் வீமனைப் பிடித்துவிட்டது. வீமன், 'நான் வென்றேன்' என்றான். புருட மிருகமோ 'நான்தான் வென்றேன்' என்றது. வழக்கு எளிதில் முடிவுபெறவில்லை. நீண்டநேரம் சொற்போர் நடந்தது. இறுதியில் இருவரும் தருமரிடஞ் சென்று வெற்றி தோல்வியைக் கேட்பது என்று முடிவு செய்தனர். தருமரிடஞ் சென்று நிகழ்ந்ததைக் கூறினர். "யார் வென்றது? யார் தோற்றது?" என்று அவர்கள் கேட்டனர்.

நடுவுநிலைமையிற் பிறழாத தருமர் வழக்கை நன்கு உசாவினர், "பிடிபட்ட காலையும் உடற் பகுதியையும் புருடமிருகத்திற்குக் கொடுத்துவிடவேண்டும்," என்று முடிவு கூறினர். வீமன் தன்னுடைய தம்பியாகவிருந் தும் தருமர் நடுவுநிலைமையிற் சிறிதும் பிறழவில்லை. புருடமிருகம் தருமருடைய முடிவைக் கேட்டு மகிழ்ந் தது. வீமனுக்கு எத்தகைய துன்பமுஞ் செய்யாமற் சென்றது. அது தருமருடைய நடுவுநிலையைப் பெரி தும் புகழ்ந்து கூறியது. எவராக இருப்பினும் நடுவு நிலைமையினின்றும் பெயராமல் இருந்தால், அவர்கள் மிகுந்த சிறப்பையடைவார்கள்.

" நிலையிற் பிரியேல் "

(இ - ள்.) நிலையில் - நீ நிற்கின்ற உயர்ந்த நிலையிலே நின்று; பிரியேல் - ஒரு போதும் நீங்காதே.

---

## கअ. இறந்தொழிந்த மாணவர்கள்

ஒருநாள் பல மாணவர்கள் நீர் விளையாடுவதற்கு எண்ணினர்கள். ஒரு பெரிய குளத்துக்குச் சென்றார் கள். பலவாறு நீந்தி விளையாடினர்கள். ஒரு பக்கத் தில் இருந்து மற்றொரு பக்கத்திற்கு நீந்திச் செல்வ தென்று அந்த மாணவர்கள் பந்தயம் போட்டுக் கொண்டு நீந்திச் சென்றார்கள்.

அந்தக் குளத்தின் அகல நீளம் ஏறக்குறைய ஒரு பர்லாங்கு இருக்கும். மாணவர்கள் ஒரு பக்கத்தில் இருந்து மற்றொரு பக்கத்திற்குப் போய்விட்டு வருவதற் குள் கால்கைகள் ஓய்ந்து போயின. நடுக் குளத்தில் வரும்போது ஒரு மாணவனுக்குக் கைகால்களை

அசைக்க முடியவில்லை. அவனுக்கு அகவை பதினான்கு. அவன் தான் தளர்ந்துபோய் இக்கட்டில் மாட்டிக் கொண்டதைக் குறிப்பாலும், கூச்சலாலும், நீரில் அமிழ்ந்து மேலெழுவதாலும் புலப்படுத்தினான்.

கரையில் நின்ற ஒரு மாணவன் நீரில் அகப்பட்டுக் கொண்டு தத்தளிக்கும் மாணவனுடைய நிலைமையை உணர்ந்தான். விரைந்து நீரில் பாய்ந்து நீந்திச் சென்றான். உயிருக்கு மன்றாடிக்கொண்டிருந்த மாண வன் உதவிக்குச் சென்ற மாணவனைக் கெட்டியாகக் கட்டிப் பிடித்துக்கொண்டான். உதவிக்குச் சென்ற மாணவனால் நீந்த முடியவில்லை. அவனுந் தொல்லைக் குள் சிக்கிக்கொண்டு தண்ணீரில் மூழ்கத் தொடங்கி னான். இரண்டுபேரும் இக்கட்டில் அகப்பட்டுக் கொண்டதைக் கண்டு, மூன்றாம் மாணவன் ஒருவன் விரைந்து உதவிக்குச் சென்றான். நீரில் தத்தளித்துக் கொண்டிருந்த இரண்டு மாணவர்களும் மூன்றாம் மாணவனைக் கட்டிப்பிடித்தார்கள். மறுகணம் மூன்று மாணவர்களும் தண்ணீருக்குள் அமிழ்ந்துவிட்டனர்.

கரையில் நின்ற சிலர் இந்தச் செய்தியைப் பல ருக்குந் தெரியப்படுத்தினர். குளத்தின் கரையில் பெரிய கூட்டம் கூடிவிட்டது. நீரில் அகப்பட்டுக் கொண்ட மாணவர்களோ கால்மணி வரையில் தத்த ளித்து இறந்துபோனார்கள். அவர்கள் மூவரும் ஒரு வரை ஒருவர் கட்டிப்பிடித்துக் கொண்டிருந்தபடி யால், பிணங்கள் மேலே மிதக்காமல் தண்ணீருக்குள் அமிழ்ந்துவிட்டன. பிறகு செம்படவர்களைக் கொண்டு வந்து வலைபோட்டு மாணவர்களுடைய உயிர் நீங்கிய உடல்களை வெளியே எடுத்தார்கள்.

அன்றுமுதல் மற்றைய மாணவர்கள், "ஔவைப் பிராட்டியார் 'நீர் விளையாடேல்' என்று கூறியுள்ளதை ஒருபொருட்படுத்தாதபடியால் மூவர் இறந்து போனார்கள்; நாம் ஔவையார் மொழிக்கு மதிப்புக் கொடுத்து அம்மொழியைப் பொன்போலப் போற்றவேண்டும்," என்று முடிவுசெய்து நீர் விளையாடலை விட்டொழித்தார்கள். பெரியோர்கள் கூறியுள்ள மொழிகளை ஒரு பொருட்படுத்தாமல் இகழ்ந்தால், இவ்வாறுதான் தீமை நேரிடும்.

" நீர் விளையாடேல் "

(இ - ள்.) நீர் - தண்ணீரிலே; விளையாடேல் - நீந்தி விளையாடாதே.

---

## கசு. திருவடியும் சிற்றுணவும்

ஓர் ஊரிலே திருவடி என்னும் பெயரையுடைய ஒரு சிறுவன் இருந்தான். அவனுக்கு அகவை பதினான்கு. அவன் ஒரு செல்வனுடைய மகன். நினைத்த பொழுதெல்லாம் அகப்பட்ட சிற்றுணவுகளைக் கண்டபடி தின்பான். அதனால் அவனுடைய உடல் நன்கு பருத்துப்போய் இருந்தது. உடல் பருத்திருந்த காரணத்தை முன்னிட்டுப் பலரும் திருவடியைத் தடியன் என்றே கூறுவது வழக்கம்.

திருவடி தன் தந்தைக்கு ஒரே மகனாக இருந்தான். ஆகையால், அவனுடைய உடலுக்கு யாதேனும் நோய்நொடிகள் வந்துவிடக் கூடாதே என்று தந்தை மிகவும் பாதுகாப்பாக இருந்தான். 'கண்டபடி சிற்றுண்டிகளைக் கொடுக்கக் கூடாது' என்று

தன்னுடைய வீட்டிலே சட்ட திட்டங்கள் செய்திருந்தான்.

ஒருநாள் திருவடிக்குத் தீனியிலே மிகுந்த அவா உண்டாயிற்று. தாயிடம் பொய்யான ஒரு காரணத்தைச் சொல்லி ஒரு ரூபாயைப் பெற்றுக்கொண்டு ஒரு சிற்றுண்டிச் சாலைக்குச் சென்றான். அங்கு வடை, முதலிய சிற்றுண்டிகள் செய்துவைக்கப்பட்டிருந்தன. அவைகள் கடலையெண்ணெய்யில் செய்யப் பெற்றவை. திருவடி தன்னிடம் இருந்த ஒரு ரூபாவுக்கும் கண்டபடி சிற்றுண்டிகளை வாங்கித் தின்றுவிட்டான். அவன் தின்றவைகள் செரிக்கவில்லை. திருவடி தின்ற சிற்றுணவுகள் மிகுதியாக உப்பிப் போய்விட்டன.

திருவடி திணறினான். அஞ்சத் தக்கவாறு பெருங் கூச்சலிட்டான். திருவடியின் தந்தை மருத்துவர்களுக்கு ஆள்விட்டான். மருத்துவர்கள் வந்து பார்த்தனர். செரிப்பதற்குச் சில மருந்துகளைக் கொடுத்தனர். அதனாலும் குணம் ஏற்படவில்லை. மூச்சுவிட முடியாமல் திருவடி தத்தளித்தான். திடீரென்று அவனுடைய மார்பை அடைத்தது. மார்பை யடைக்கவே திருவடி இறைவனுடைய திருவடியை அடைந்துவிட்டான். திருவடிக்கு நேர்ந்த இறப்பைக் குறித்துப் பலரும் வருந்தினர். சிற்றுண்டிகளை மிகுதியாகத் தின்றால், இவ்வாறுதான் இடுக்கண் ஏற்படும்.

## " நுண்மை நுகரேல் "

(இ - ள்.) நுண்மை - நோயைத் தருகிற சிற்றுண்டிகளை; நுகரேல் - உண்ணாதே.

---

## ௨௦. கல்வி பொருள் அளிக்கும்

முன்னாளிலே மதுரையில் நற்றமிழ்நம்பி என்னும் பெயருடைய புலவர் ஒருவர் இருந்தார். அவர் பல நூல்களைக் கற்றுச் சிறந்திருந்தார். அவர் படிக்காத நூல்களே இல்லை. அக்காலத்தில் மதுரையில் இருந்த சங்கப் புலவர்கள் தங்கட்கு ஏதேனும் ஐயம் நேரிட்டால், தங்கள் ஐயத்தை நற்றமிழ் நம்பியிடம் கேட்டுத் தான் போக்கிக் கொள்வார்கள்.

நற்றமிழ்நம்பி பெரும் புலவராக விளங்கியிருந்தமையின் எப்பொழுதும் நூலாராய்ச்சியிலே ஈடுபட்டிருந்தார். அவருடைய குடும்பம் எளிய நிலைமையில் இருந்தது. ஒருநாள் சில புலவர்கள் பாண்டிய மன்னனைக் கண்டு நற்றமிழ்நம்பி வறுமையால் வருந்துவதைத் தெரியப்படுத்தினார்கள். அதனைப் பாண்டிய மன்னன் கேள்விப்பட்டு, "ஆ அப்படியா! பெரும் புலவராக விளங்கும் அவர் செல்வத்தினுஞ் சிறந்து விளங்குவார் என்று எண்ணி நான் இதுவரையில் அவருடைய வாழ்க்கை நிலைமையைக் கருதாமல் இருந்துவிட்டேன்," என்று கூறி நற்றமிழ்நம்பிக்கு மிகுந்த பொருள் அளித்ததுடன் ஓர் ஊரையும் உரிமையுடன் பயன்படுத்திக்கொள்ளுமாறு அளித்தான்.

வறுமையில் வருந்தி நின்ற புலவர், திடீரென்று செல்வக் கடலில் வீழ்ந்து திளைக்குமாறு நேர்ந்தது அறிவின் மாட்சியே என்று அனைவரும் வியந்தனர். அவருக்கேற்பட்ட பெருமையைக் கண்டு பலரும் பல நூல்களைக் கற்றுச் சிறப்படைந்தனர்.

### "நூல்பல கல்"

(இ - ள்.) நூல்பல - அறிவை வளர்க்கும் நூல்கள் பலவற்றையும்; கல் - நீ கற்றுக்கொள்வாயாக.

## உக. வெண்ணுகனும் ஔவையாரும்

ஒருநாள் ஔவையார் ஓர் ஊர் வழியாகச் சென்று கொண்டிருந்தார். அஃது ஒரு சிற்றூர். அப்பொழுது ஔவையாருக்குப் பசி மிகுதியாக இருந்தது. வழியிலிருந்த ஒரு வீட்டிற்குச் சென்று சிறிது உணவு கேட்டார். அவ் வீட்டுக்காரனுடைய பெயர் **வெண்ணுகன்.** அவன் ஒரு பெரிய சோம்பேறி; சாப்பிடுவதென்றால், ஒரு படி அரிசிச் சோற்றை ஒரே இழுப்பில் இழுப்பான். வேலை செய்வதென்றால் அசையவே மாட்டான். அவனுக்கு நன்செய் நிலங்கள் பல இருந்தும் அவன் அவைகளில் நெல்லை விதைக்கவில்லை. எள்ளு கொள்ளு அவரை துவரை முதலிய புன்செய்த் தானியங்களையே பயிரிட்டிருந்தான். ஏனெனில், நெற் பயிரிட்டால் அவைகட்கு மிகுதியாக உழைக்கவேண்டும். புன்செய்த்தானியங்களாக இருந்தால், அதிகமாகப் பாடுபடவேண்டியதில்லை யல்லவா?

வெண்ணுகன் ஔவையாரைப் பார்த்து, "நான் அதிகமாக நெல் பயிரிடுவதில்லை. கம்பு கேழ்வரகு சோளம் முதலியவைகளைத்தான் பயிரிடுகிறேன்," என்று கூறித் தன்னுடைய சோம்பேறித்தனத்தைப் புலப்படுத்தினுன். "கூழ் இருக்கிறது சாப்பிடுங்கள்," என்று கூறினுன்.

ஔவையார் வெண்ணுகனுடைய சோம்பேறித் தனத்தையும், அதனுல் நன்செயில் புன்செய்த்தானியங்களைப் பயிரிட்டுக் கூழ் முதலியவைகளைச் சாப்பிடுவதையும் அறிந்துகொண்டார். அவனைப் பார்த்து, "நீ மிகவும் நல்லவனுக இருக்கிருய். ஆயினும், இவ்வாறு சோம்பேறியாக இருந்துகொண்டு, நன்செயைப்

புன்செயாக்கித் தாழ்ந்த உணவுகளைச் சாப்பிடுவது தக்கதன்று. நெல்லையே பயிர் செய்து விளைவிப்பாயாக," என்று அறிவுறுத்தினார். அது முதல் தான், **நெற்பயிர் விளை என்னும் இந்த மொழி தோன்றிற்று.**

**"நெற்பயிர் விளை"**

(**இ - ள்.**) நெற்பயிர் - நெல்லுப்பயிரை; விளை - வேண்டிய முயற்சி செய்து விளைவிப்பாயக.

---

## உஉ. மனுநீதிச் சோழனுடைய கூறு

பல ஆண்டுகட்கு முன்பு ஒரு பெரிய நகரிலே நீதி மன்றத் தலைவர் ஒருவர் இருந்தார். அவர் நல்லொழுக்கம் அமையப் பெற்றவர். அறநெறியிலே முறைமைபெற நடந்துகொண்டார். அதனால் அவருடைய புகழ் எங்கும் பரவியிருந்தது. அந்த நீதி மன்றத் தலைவரின் வீட்டிற்கு அடுத்த வீட்டுக்காரர் நீதிமன்றத் தலைவரின் நேர்மையை ஆராய்ந்து அறிய வேண்டும் என்று உறுதி செய்துகொண்டு அதற்குத் தகுந்த சமயத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தார்.

பக்கத்து வீட்டுக்காரருடைய முருங்கை மரத்தின் கிளை ஒன்று நீதிமன்றத் தலைவருடைய தோட்டத்திற்குள் நீண்டு நின்றது. அக்கிளையிலே காய்கள் நன்கு காய்த்திருந்தன. நீதிமன்றத் தலைவரின் மனைவி ஒரு நாள் அந்த முருங்கைக் கிளையிலிருந்த காய்களில் பலவற்றைப் பறித்துக் கறியாக்கிவிட்டாள். முருங்கை மரத்துக் குரியவர் செய்தியை உணர்ந்தார். "இந்த நீதி மன்றத் தலைவர் மனுநீதிச் சோழனுடைய ஒரு கூறு

என்று எல்லோரும் கூறுவதை இப்பொழுது நான் பார்த்துவிடுகிறேன்," என்று எண்ணிக்கொண்டார். எண்ணிக்கொண்டவர் நீதிமன்றத் தலைவரின் மனைவி முருங்கைக் காய்களைப் பறித்துவிட்டதாகக் குற்றச் சாட்டு ஒன்றை நீதிமன்றத் தலைவரிடம் கொண்டு போய்க் கொடுத்தார். அதனைப் பார்த்த நீதிமன்றத் தலைவர் தாம் அதனை நன்கு உசாவுவதாக வாக்களித்தார். வீட்டிற்கு வந்தவுடன் தம்முடைய மனைவியைப் பார்த்து, "நீ பக்கத்து வீட்டுக்காரருடைய தோட்டத்து முருங்கை மரத்திலே இருந்து காய்களைப் பறித்தாயா?" என்று கேட்டார். பறித்ததாகக் கூறினள் மனைவி.

முறைமன்றத் தலைவர் முறைமன்றத்திற்குச் சென்றதும் தமக்கு ஒரு ரூபா ஒறுப்புக்கட்டணம் விதித்துக்கொண்டார். உடனே அந்த ரூபாயை எடுத்து முறைமன்றத்திலே செலுத்திவிட்டார்.

வழக்குத் தொடுத்தவருக்கு இந்தச் செய்தி தெரிந்தது. அவர் மிகுந்த வியப்படைந்தார். "இந்த முறைமன்றத்தலைவர் உண்மையில் மனுநீதிச் சோழனாகத்தான் விளங்குகிறார். நான் இவருடைய அற நெறியைப் போற்றுகிறேன். உயரிய நிலைமையில் அமர்ந்திருப்பவர்கள் நேர்மையுள்ளவர்களாக இருத்தல் வேண்டும். அதுதான் மிகவுஞ் சிறந்தது," என்று முறைமன்றத் தலைவரைப் போற்றினர். அவருடைய நேர்பட ஒழுகுங் குணத்தைத் தாமும் பலரிடம் பாராட்டத் தொடங்கினர்.

### "நேர்பட ஒழுகு"

(இ - ள்.) நேர்பட - நேர்மையான வழியிலே, ஒழுகு - நீ நடப்பாயாக.

---

## உ௩. அறிவுபெற்ற அரசன்

இரண்டு அரசர்களுக்குள் கொடிய பகை மூண்டிருந்தது. ஒருவரையொருவர் தொலைப்பதற்குத் தகுந்த சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். அப்போது ஓர் அரசனுடைய இரண்டு பிள்ளைகள் மற்றோர் அரசனிடத்திலே அகப்பட்டுக்கொண்டார்கள். பழி தீர்ப்பதற்குச் சமயம் பார்த்துக்கொண்டிருந்த மன்னன் தன்னிடம் அகப்பட்டுக்கொண்ட இரு சிறுவர்களையுங் கொன்று தன்னுடைய பழியைத் தீர்த்துக் கொள்வதற்கு எண்ணினான். தன்னிடம் சிக்கியுள்ள இரண்டு அரசிளஞ் சிறுவர்களையும் யானையின் காலில் இடறிக் கொலை புரியுமாறு கட்டளையிட்டான்.

கொலைஞர்கள் அரசன் கட்டளைப்படியே இரண்டு பிள்ளைகளையும் கொலை செய்வதற்கு ஏற்பாடு செய்தார்கள். சிறுவர்கள் கொலைக்களத்திற்கு இட்டுச் செல்லப்பட்டனர். கொலை செய்வதற்கு யானை ஒன்றும் வந்து காத்துக்கொண்டு நின்றது.

தந்தையினிடம் ஏற்பட்ட பகை காரணமாக மைந்தர்களை, அரசன் கொலைபுரிய ஏற்பாடு செய்திருத்தலை ஓர் அறிஞர் உணர்ந்தார். அவர் சிறந்த அறிவு நலமும் அருட்பெருக்கும் ஒருங்கே அமையப் பெற்றவர். அவர் விரைந்து கொலைக்கு ஏற்பாடு செய்து கொண்டிருக்கும் அரசனிடஞ் சென்றார். அரசனைப் பார்த்து, "அரசே! இச் சிறுவர்களின் தந்தையின்பால் நீ கொண்டிருக்கும் பகைமை காரணமாக, ஒன்றும் அறியாத இச் சிறுவர்களைக் கொலைபுரிதற்கு முயலுகிறாய். இது மிகவுங்கொடிது. தன் பகைவன்

தன்னிடஞ் சிக்கிக்கொண்டான். ஆயினும் அவனுக்கு நன்மை செய்யவேண்டியது மக்கட் பிறப்பினருடைய கடமையாகும். அவ்வாறாகவும் குற்றமற்ற இச் சிறுவர்களை நீ கொலை புரிவதன் காரணமாக நீ மிகவுங் கொடிய நிரயத்திலே விழுவாய். அந்த நிரயத்தினின்றும் நீ கரையேறுவது மிகவும் அருமையாகும். பிறர் கெடத்தக்க தீவினைகளைப் புரிவோர் தாங்கள் கேடடையாமல் இருப்பார்களா? பகைவர்மாட்டுப் பழி தீர்த்துக் கொள்வதால் உனக்கு ஏற்படப் போகிற நன்மை யாது? தனக்குத் துன்பஞ் செய்தவர்களை ஒறுத்தல், அவர்கள் நாணும்படி நன்மை செய்வதுதான் என்று அறிஞர்கள் கூறியிருப்பதற்கேற்ப நீ இச் சிறுவர்கட்கு நன்மை யன்றோ செய்து அனுப்புதல் வேண்டும்,'' என்று மிகவுங் கடுமையாக இடித்துரைத்தார்.

அறிஞரின் உரையைக் கேட்ட அரசன் அஞ்சினான். அச் சிறுவர்களைக் கொலை புரியாமல் அனுப்பி விட்டான். ஒவ்வொருவரும் பிறருக்குத் தீமை புரியாமல் இருத்தற்கு முயலவேண்டும்.

"நைவினை நணுகேல்''

(இ - ள்.) நைவினை - பிறர் கெடத்தக்க தீவினைகளை, நணுகேல் - ஒருபோதுஞ் செய்யாதே.

## உக. கம்பரா? வம்பரா?

ஆந்தையூர் என்னும் ஊரிலே அம்பர்கிழான் என்னும் பெயருடைய ஓர் இளைஞன் இருந்தான். அம்பர் கிழான் வம்பு மொழிகளைப் பேசுவதில் வல்லவன். எவ்விடத்திற்குப் போனாலும் யாரைக் கண்டாலும் ஏதேனும் குறும்பு மொழிகளைப் பேசிக்கொண்டே இருப்பான். அதனால் அவனுக்குப் பலரிடமிருந்து வசவுரைகளும் சமயம் நேர்ந்தால் அடியும் கிடைக்கும். அம்பர் கிழான் அவைகளை ஒரு பொருட்படுத்தமாட்டான். ஒருகால் ஆந்தையூருக்கு ஓர் அறிஞர் வந்தார். அவர் இராமாயணச் சொற்பொழிவு செய்வதிலே மிகவும் சிறந்தவர். ஊரார்கள் அந்த அறிஞரைக் கொண்டு ஒரு சொற்பொழிவு செய்யுமாறு செய்தனர். அன்று அவர் பேசியது அனுமான் இலங்கையில் தீமூட்டியதைப் பற்றியதாகும்.

மக்கள் புலவருடைய சொற்பொழிவிலே திளைத்து மகிழ்ந்துகொண்டிருந்தனர். அம்பர்கிழான் சும்மா இருக்கவில்லை. அவனும் அறிஞருடைய சொற்பொழிவில் மகிழ்ந்தானாயினும் தன்னுடைய மதிப்புரையை, '**இவர் கம்பரா? வம்பரா?**' என்னும் சொல் மூலமாக வெளிப்படுத்தினான்.

அம்பர்கிழானுடைய உரை சிலருக்குச் சினத்தை உண்டுபண்ணியது. அவர்களுள் முன்சினக்காரரர் ஒருவர் இருந்தார். அவர் அம்பர்கிழானுடைய கன்னத்திலே ஐந்தாறு அறைகள் கொடுத்துவிட்டார். பக்கத்திலிருந்தவர்கள் அறை கொடுப்பதைத் தடுக்கவில்லை. '**வாயாடிப் பையலுக்கு வேண்டும் நன்றாக!**'

'அடங்கா மாட்டுக்கு மூங்கில்தடி ராசன்' என்று சொல்லிக் கொண்டு பேசாமல் இருந்துவிட்டார்கள்.

அடியுண்ட அம்பர்கிழான் மிகுந்த வருத்தமடைந்தான். அதுமுதல் மனம்போனவாறு இழிமொழிகள் பேசுவதை நிறுத்திக்கொண்டான். நன்மொழிகள் தான் எந்த இடத்தினும் எல்லோராலும் போற்றப் பெறுமேயல்லாமல், இழிமொழிகள் போற்றப்பெற மாட்டா. இழிமொழிகளால் துன்பந்தான் உண்டாகும். ஆகையால், எவரும் சிறுமையான மொழிகளைப் பேசுதல் கூடாது.

"நொய்ய வுரையேல்"

(இ - ள்.) நொய்ய - பயனற்ற சிறுமொழிகளை, உரையேல் - நீ பேசாதே.

---

## உரு. பழங்கறி இன்ப அடிகள்

குன்றை என்னும் ஊரிலே **உண்மையறிவின்ப** அடிகள் என்னும் துறவி ஒருவர் பல ஆண்டுகளுக்கு முன்பு உறைந்திருந்தார். அவர் துறவிக்கோலத்தை மேற்கொண்டிருந்தாராயினும் மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளையும் அடக்குதற்குச் சிறிதேனும் பயிற்சி பெற்றிலர். அந்த அடிகளுக்குப் பழங்கறியாகிய சுண்டற் கறியைக் கண்டால் அளவு கடந்த மனக்கிளர்ச்சியும் இன்பமும் உண்டாகிவிடும். அதனால் அவருடைய பெயர் **'பழங்கறி இன்ப அடிகள்'** என்றும் வழங்கி நின்றது.

பழங்கறியும் கிழங்கு வகைகளும் நோயை உண்டு செய்வன ஆகும். உண்மையறிவின்ப அடிகள் காலை

மாலை நண்பகல் என்னும் மூன்று காலங்களிலும் பழங்கறியை அளவுகடந்த விருப்பத்துடன் மிகுதியாகத் தின்று கொண்டிருந்தபடியால், அவருடைய உடலில் நோய்களின் கூட்டங்கள் அடிக்கடி குடிபுகுந்தன.

அடிகளார் ஒரு மடத்தின் தலைவராக அமர்ந்திருந்தபடியால், மிகுந்த பொருளைச் செலவு செய்து அடிக்கடி நோயைப் போக்கிக்கொண்டே வந்தார். அவருக்கு மருந்தளித்து நோய் தீர்த்த மருத்துவர்கள், "பழங்கறியை உண்ணுதல் கூடாது. பழங்கறிதான் நோய்களையெல்லாம் உண்டாக்குகின்றன," என்று மிகவும் வற்புறுத்திக் கூறினர்.

பழங்கறியிலேயே உயிரை வைத்திருந்த உண்மையறிவின்ப அடிகள் (சச்சிதாநந்த சாமிகள்) மருத்துவர்களின் நல்லுரையைச் சிறிதும் பொருட்படுத்திலரல்லர். மேன் மேலும் அதனையே தின்றுகொண்டிருந்தார். ஒருமுறை அடிகளுக்கு நோய் மிகவுங் கடுமையாகிவிட்டது. நோயைத் தீர்ப்பதற்கு ஆயிரம் வெண்பொற் காசுகளுக்குமேல் செலவு செய்துகூட நோயைத் தீர்க்க முடியவில்லை. வீடுபேற்றைப் பெற்றுவிட்டார். ஆகவே, நோய்க்கு இடங்கொடாமல் நாம் நம் உடலைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டியது மிகவும் இன்றியமையாததாகும்.

## "நோய்க்கிடங் கொடேல்"

(இ - ள்.) நோய்க்கு - உடல்நலக் கேட்டிற்கு; இடங் கொடேல் - வழியுண்டாகுமாறு நீ நடந்துகொள்ளாதே.

---

## உசுஅ. இழிமொழி பேசிய இளைஞர்கள்

ஓர் உயர்நிலைப்பள்ளியின் தலைமையாசிரியர் தமது பள்ளி மாணவரின் ஒழுக்கத்திலே மிகுந்த கருத்துடன் இருந்தார். மாணவர்கள், பள்ளிக்கு வெளியிலோ, பள்ளியிலோ இழிந்த மொழிகளைப் பேசுதல் கூடா தென்றும், பேசுபவர்கள் கடுமையாக ஒறுக்கப்பெறு வார்கள் என்றும் கண்டிப்பான கட்டளை பிறப்பித் திருந்தார். அத் தலைமையாசிரியர் மிகவும் கண்டிப் பானவர். தம் கட்டளையைக் கடைப்பிடித் தொழு காதவர்களை நன்ருக ஒறுப்பார். அல்லது பள்ளியை விட்டே வெளியேற்றி விடுவார். மாணவர்கள் அவ் வாசிரியருக்கு மிகவும் அஞ்சி நடந்துகொண்டனர்.

ஒருநாள் பள்ளிக்கூடம் விடுமுறை. அன்று தலைமையாசிரியர் கடைத்தெருவுக்கு ஏதோ ஓர் அலுவலாகச் சென்று ஒரு கடையில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார். அப்போது இரண்டு மாண வர்கள் அவ் வழியே போரிட்டுக்கொண்டு (சண்டை போட்டுக்கொண்டு) வந்தனர். அவர்கள் நன்மக்கள் முன்பு பேசத் தகாத மொழிகளைப் பேசி ஒருவரை யொருவர் வைதுகொண்டனர். ஆசிரியர் கடையில் அமர்ந்திருத்தலை அவர்கள் பார்க்கவில்லை.

மறுநாள் மாணவர்கள் பள்ளிக்குச் சென்றனர். தலைமை ஆசிரியர் முதலுள் போரிட்டுக்கொண்ட மாணவர்கள் இருவரையும் தமது முன்பு அழைத்தார். அவர்களைப் பார்த்து, "நீங்களிருவரும் பள்ளிக் கூடத்தைவிட்டு நீங்குதல் வேண்டும்; அல்லது, ஒவ் வொருவரும் இருபத்துநான்கு பிரம்படிகள் வீதம்

பெற்றுக்கொள்ளுதல் வேண்டும். பிரம்படிகளில் பாதி கையிலும், பாதி முதுகிலும் கொடுக்கப்பெறும். உங்களுக்கு எது விருப்பம் கூறுங்கள்," என்று கேட்டார்.

பள்ளியைவிட்டு நீங்கினால் தாய் தந்தையர்களுடைய சினத்திற்கு ஆளாக நேரிடும் என்று அஞ்சிய மாணவர்கள் பிரம்படியைப் பெற்றுக்கொண்டனர். அதுமுதல் அவர்கள் இழிந்த சொற்களைப் பேசுவதில்லை யென்னும் உறுதியுடன் இருந்து சிறந்த பெருமையை அடைந்தார்கள். ஆகையால், கீழ்மக்கள் பேசக்கூடிய மொழிகளை மேன்மக்கள் பேசுதல் கூடாது.

"பழிப்பன பகரேல்"

(இ - ள்.) பழிப்பன - அறிவுடையவர்களாலே வெறுத்தொதுக்கப் படுவனவாகிய இழிசொற்களை; பகரேல் - பேசாதே.

---

## உஎ. ஐயாக்குட்டியும் ஆறுமுகமும்

ஓர் ஊரிலே ஐயாக்குட்டி என்றும், ஆறுமுகம் என்றும் பெயருடைய இரண்டு இளைஞர்கள் இருந்தார்கள். ஆறுமுகம் பள்ளிக்கூடத்திலே சிறிது கல்வி கற்றவன்; அதனால் நல்லொழுக்கமுடையவனாக இருந்தான். ஐயாக்குட்டிக்கோ ஓர் எழுத்தும் தெரியாது. அதனால், அவனுடைய குணம் மிகவும் கொடுமையானதாக இருந்தது. ஐயாக்குட்டிக்கும் ஆறுமுகத்திற்கும் நட்புண்டாயிற்று. சிலர் ஆறுமுகத்தைப் பார்த்து, "ஐயாக்குட்டி மிகவுந் தீயவன்; நீ அவனுடன் நட்புக் கொள்ளாதே. நட்புக்கொள்ளுவாயானால், உனக்குத்

துன்பம் உண்டாகும். கல்லாத பேதைகளின் நட்புத் தள்ளத் தக்கதேயன்றிக் கொள்ளத்தக்கது அன்று,'' என்று அறிவுரை கூறினர்கள்.

ஆறுமுகம் ஐயாக்குட்டியிடம் கொண்ட நட்பை விட்டுவிடவில்லை. அவன் நம்மை என்னதான் செய்து விடுவான் பார்ப்போம் என்னும் துணிவுடன் இருந் தான். ஐயாக்குட்டி மற்றவர்களிடந் தன் குறும்பு களை மிகுதியாகக் காட்டினனே யன்றி, ஆறுமுகத் திடம் காட்டவில்லை. நாட்கள் பல சென்றன. ஆறு முகம் நல்லவனுகவுந் தான் கெட்டவனுகவும், ஆறு முகம் அறிவுடையவனுகவும் தான் அஃதில்லாதவனுக வும் இருப்பது ஐயாக்குட்டிக்குப் பிடிக்கவில்லை. ஆறு முகத்தை எவ்வாருயினும் கொன்று தொலைத்துவிட வேண்டும் என்று முடிவு செய்தான். அறிவற்றவர் களுடைய நட்பு விரைவில் தேய்ந்துபோவது இயற்கை.

ஒருநாள் மாலையில் ஐயாக்குட்டி ஆறுமுகத்தை மக்கள் நடமாட்டம் இல்லாத ஆற்றங்கரைக்கு அழைத் துச் சென்ருன். அபினியைக் கொஞ்சம் வெல்லத்தில் வைத்து, "இந்த வெல்லத்தைத் தின்பாயாக!" என்று கொடுத்தான். அபினி சேர்ந்த வெல்லத்தைத் தின்ற ஆறுமுகம் அறிவுசோர்ந்து மயங்கினன். ஆறுமுகத் தின் இடுப்பிலே பெரிய கல் ஒன்றைச் சேர்த்துக் கட்டி, அவனைப் பிடித்து ஆற்றில் ஓர் ஆழமான இடத்திலே தள்ளிவிட்டான்.

ஆறுமுகம் அறிவு மயங்கியிருந்தபடியாலும், இடுப் பில் கல் கட்டப்பட்டிருந்தபடியாலும் ஆற்று நீரில் அமிழ்ந்து இறந்து போனன். ஆறுமுகம் இறந்ததைக் கண்டு ஐயாக்குட்டி உள்ளங் குளிர்ந்தான். பாம்பு

போன்ற தீயவர்களுடன் நட்புகொண்டால், இவ்வாறு தான் அழிந்தொழிய நேரிடும்.

"பாம்பொடு பழகேல்"

(இ - ள்.) பாம்பொடு - பாம்பைப் போன்ற தீய குணம் உடையவர்களுடனே, பழகேல் - சேராதே.

---

## உஅ. புகழேந்தியின் சொற்பொழிவு

ஓர் ஊரிலே புகழேந்தி என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவனுக்குக் கல்வி பயின்று சிறப்படைய வேண்டும் என்று மிகுந்த அவா உண்டாயிற்று. ஓர் அறிஞரையடுத்துச் சில நூல்களைப் படித்தான். அவ்வளவிலே தான் எல்லாம் படித்து முடித்துவிட்டதாக எண்ணிக்கொண்டான். அதற்கு மேல் அவன் படிப்பதற்கு முயற்சி செய்யவில்லை. சொற்பொழிவு செய்வதற்கு நன்கு பழகிக்கொண்டால், பேரும் புகழும் மிகுதியாக உண்டாகும் என்று மனப்பால் குடித்தான். அறிஞர்களுடைய சொற்பொழிவுகளை அடிக்கடி கேட்டுக்கொண்டு வந்தான்.

ஒருநாள் பக்கத்து ஊரிலே ஒரு சங்கத்தின் ஆண்டு நிறைவுவிழா நடைபெற்றுக் கொண்டிருந்தது. பல அறிஞர்கள் சொற்பொழிவுகள் செய்தார்கள். புகழேந்தி, "நாம் இந்தச் சமயத்தை நழுவவிடக் கூடாது; இங்கு மக்கள் மிகுதியாகக் கூடியிருக்கிறார்கள். நாமும் இங்கே ஒரு சொற்பொழிவு செய்தால் நம்முடைய புகழ் எங்கும் பரவும். நாம் சிறப்படைவதற்கு இதுதான் தகுந்த சமயம்," என்று முடிவு செய்

தான். விழாவில் தலைமை தாங்கியிருந்த பெரியாரைப் பார்த்துத் தானும் ஒரு சொற்பொழிவு செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டான்.

சொற்பொழிவு செய்தற்குப் பெரியார் உடன்பாடு தந்தருளினார். உடனே புகழேந்தி சொற்பொழிவு செய்யும் மேடைமீது ஏறிச் சொற்பொழிவு செய்யத் தொடங்கினான்.

"இங்குக் கூடியுள்ள அறிஞர்களே! சகோதர சகோதரிகளே! நான் இப்பொழுது ஞானசம்மந்தர் பெருமை என்னும் பொருளைப்பற்றிச் சொற்பொழிவு செய்யப்போகிரேன்," என்று தொடங்கி மிகுந்த எழுத்துப் பிழைகளுடனும், பொருட் பிழைகளுடனும் உளறிக்கொட்டினான். அவைத் தலைவர் இம் முழு மகனை இனிமேலும் பேசவிடக்கூடாது என்றெண்ணி அவனை உட்காரச் சொன்னார். புகழேந்தியின் பிழை நிறைந்த பேச்சுக்களைக் கேட்டு அனைவரும் விழுந்து விழுந்து நகைத்தார்கள். அவையோர்களுடைய நகைப்பிற்குக் காரணத்தை யறியாத புகழேந்தி, அவையோர்கள் தன்னுடைய சொற்பொழிவைக் கேட்டு மகிழ்வதாக எண்ணித் தானும் மகிழ்ந்தான். பிழைபடப் பேசினால் இவ்வாறுதான் இழிவடைய நேரிடும்.

## "பிழைபடச் சொல்லேல்"

(இ - ள்.) *பிழைபட* - வழுக்கள் உண்டாகும்படி, *சொல்லேல்* - ஒன்றையும் பேசாதே.

## உ௯. சிறப்படைந்த கண்ணுயிரம்

மெய்யூர் என்னும் ஓர் ஊரிலே கண்ணுயிரம் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் பல நூல்களையும் படித்து அறிவிற் சிறந்திருந்தான். ஒருநாள் ஓர் அறிஞர் மெய்யூருக்கு வந்து ஒரு சொற்பொழிவு செய்தார். அவர் பேசிய பொருள், 'பெருமை.' "ஒவ்வொருவரும் இவ்வுலகத்திலே புகழுடன் வாழ்ந்து பெருமையடைய வேண்டும்," என்றும், "புகழ் உண்டாகுமாறு உலகில் வாழ்பவர்கள் தாம் சிறந்தவர்கள்," என்றும், "காதவழி கூடப் பேரில்லாதவர்கள் கழுதைக்கு ஒப்பானவர்கள்," என்றும் அவர் தமது சொற்பொழிவிலே கூறிவிட்டுச் சென்றார்.

சொற்பொழிவைக் கேட்டவர்கள் ஒரு காதால் வாங்கி, அதனை மற்றொரு காதால் விட்டுவிட்டுப்போய் விட்டார்கள். அறிவிற் சிறந்தவனாக இருந்த கண்ணுயிரம் மற்றவர்களைப் போலக் கேட்டதை அப்படியே விட்டுவிடவில்லை. தான் புகழுண்டாகுமாறு வாழ்ந்து சிறப்படைய வேண்டும் என்று எண்ணினான். புகழ் பெறுவதற்குச் சிறந்தவழி யாது என்று எண்ணமிட்டான்.

மற்றவர்களிடத்தில் அன்பு பாராட்டுதல், எவ்வுயிர்க்குந் தீமை செய்யாதிருத்தல், உண்மையே பேசுதல் ஆகிய மூன்றையும் கடைப்பிடித்தொழுகினான். இவைகளைக் கைவிட்டுவிடுமாறு பல சமயங்கள் நேர்ந்தன. ஆயினும் கண்ணுயிரம் பொறுமையிழந்து தன் கொள்கைகளை விட்டுவிடவில்லை. ஐந்தாறு ஆண்டுகள்

மனவுறுதியுடன் நின்றான். அதன் பிறகு கண்ணாயிரத்தின் புகழ் எங்கும் பரவியது. ஊராளும் மன்னன் கண்ணாயிரத்தை அழைத்துத் தன்னுடைய அமைச்சனாக அமர்த்திக்கொண்டான். ஆகவே, ஒவ்வொருவரும் பெருமை பெறத்தக்க வழியிலே நடத்தல் தான் சிறந்ததாகும்.

## "பீடுபெற நில்"

(இ - ள்.) பீடு - பெருமையை ; பெற - பெறும்படியாக ; நில் - நல்லவழியிலே நில்.

---

## ௩௦. ஔவையாரும் அறிவிலியும்

நம்மை ஒருவர் புகழ்ந்துகொண்டு வருவார்களானால், நாமும் அவர்களைப் போற்றி ஆவன செய்தல் வேண்டும். அவ்வாறு செய்யாமல் நம்மைப் புகழ்ந்து வருபவர்களை நாம் இகழ்ந்திருப்போமானால், அச்செயல் மக்கட்டன்மையுடன் பொருந்தியது ஆகாது.

முன்னாளிலே நமது நாட்டில் முதலெழு வள்ளல்கள் என்றும், இடையெழு வள்ளல்கள் என்றும், பல வள்ளல்கள் இருந்தார்கள். அவர்களை அறிவு மிக்க புலவர்கள் பலர் புகழ்ந்து பாடிச் சென்றார்கள். அப் புகழ்ச்சியினை யேற்றவர்கள் தம்மைப் புகழ்ந்தாரைப் போற்றிச் சிறப்புச் செய்தனர்.

ஆத்திசூடியை அருளிச் செய்த ஔவையார் பழந் தமிழ் மன்னர்களையும் செல்வர்களையும் புகழ்ந்து பாடியே காலம் போக்கிக்கொண்டு இருந்தார். ஔவையாருடைய பாட்டைப் பெற்றவர்கள் மிகவுஞ் சிறந்து விளங்கினார்கள். ஒருநாள் ஔவையார் செல்வம்

படைத்த அறிவிலி ஒருவனைப் புகழ்ந்து பாடினார். அவனுடைய தன்மையை உணராமல்தான் ஔவையார் புகழ்ந்து அவனைப் பாடிவிட்டார். அக் கீழ்மகனோ, "என்னை ஏன் புகழ்ந்து பாடினாய்? உனக்கு வேறு வேலை இல்லையா? போ போ," என்று இகழ்ந்து விரட்டினான்.

அவ் வறிவிலியின் செயல்களைக் கண்ட ஔவையார் வியப்படைந்தார். 'இத்தகைய அறிவிலியும் உள்ளானோ? நாம் அறியாமற் போனோமே' என்று எண்ணினார். "நீ இவ்வாறு இருத்தல் கூடாது. உன்னை யாரேனும் இகழ்ந்து வசைபாடித் தொலைத்து விடுவார்கள். ஆகையால், நீ உன்னைப் புகழ்ந்தாரைப் போற்றி வாழ்வாயாக!" என்று அறிவுறுத்திச் சென்றார்.

"புகழ்ந்தாரைப் போற்றி வாழ்"

(இ - ள்.) புகழ்ந்தாரை - உன் பெருமைகளைக் கூறி வாழ்த்தியவர்களை, போற்றி - காப்பாற்றி, வாழ் - வாழ்வாயாக!

---

## கக. நல்லியக்கோடன்

நரிக்குடி என்னும் ஊரிலே நல்லியக்கோடன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவனுக்குப் போதிய அளவு விளைநிலங்கள் இருந்தன. அவன் இளமைதொட்டே சோம்பேறியாகிப் பழகிவிட்டான். நிலங்களை ஒழுங்காகச் சாகுபடி செய்வதில்லை. அவைகளை எப்பொழுதும் வெறுமையாகவே போட்டுவைப்பான். நல்லியக்கோடனுக்கு உறங்குவதில் மிகவும் விருப்பம் உண்டு. உறங்கியெழுந்தால்

வீணர்களோடு அமர்ந்து ஊர்க் கதை வீண்பேச்சு முதலியவைகளைப் பேசுவான்.

நல்லியக்கோடனுடைய தந்தை ஊக்கத்துடன் விளைநிலங்களில் உழைத்து வந்தபடியால், தந்தை இருக்கிறவரையில் மைந்தனுக்குக் கவலையில்லாம லிருந்தது. பிறகோ வயிற்றுப்பாட்டிற்கே திண்டாட் டம் ஏற்பட்டுவிட்டது. ஆயினும், நல்லியக்கோடன் சோம்பேறித் தன்மையை விடவில்லை. நிலங்களை வெறுமையாகப் போட்டு வழக்கம்போல் காலங்கடத்தி வந்த அவன் இறுதியில் ஐயமேற்கத் தொடங்கிவிட் டான். ஐயமேற்றுண்பதும் உறங்குவதுமாக அவன் காலங்கழித்துக்கொண்டு இருக்கும்போது ஒருநாள் ஔவையார் ஒரு வீட்டில் அமர்ந்திருந்தார்.

நல்லியக்கோடன் ஓர் ஏனத்துடன் உணவுக்கு வந்து நின்றான். அவனுடைய உடல் போர்மறவ னுடைய உடலைப்போல் மிக ஆற்றலமைந்ததாகக் காணப்பட்டது. ஔவையார் நல்லியக்கோடனைப் பார்த்து, "நீ யார்? ஐயமேற்கவேண்டிய காரணம் யாது?" என்று உசாவினார். அப்பொழுது அங்கிருந்த வர்கள் நல்லியக்கோடன் சோம்பேறியாக இரந்துண்டு திரிதலையும் அவனுடைய நிலங்கள் தரிசாகக் கிடத்தலை யும் கூறினார்கள்.

அவர்கள் கூறியதைக் கேட்ட ஔவையார் அவன் மீது இரக்கங்கொண்டார். "உடலாற்றல் அமைந்தவ னாகிய நீ இவ்வாறு இரந்துண்டு திரிதல் ஏற்றதன்று. பிறரை வணங்கித் தொழுது உணவினை வாங்கி உண் பதைப் பார்க்கினும், நிலத்தை உழுது பயிர்செய்து வாழ்க்கையை நடத்துதலே மிகவுஞ் சிறந்ததாகும்,"

என்று அவனுக்குப் பல அறிவுரைகள் கூறி இறுதியில், 'பூமி திருத்தியுண்' என்று கூறினார். அன்று முதல், 'பூமி திருத்தியுண்' என்னுஞ் சொல் மக்களிடையே வழங்குவதாயிற்று.

"பூமி திருத்தியுண்"

(இ - ள்.) பூமி - உன்னுடைய விளைநிலத்தை, திருத்தி - சீர்த்திருத்திப் பயிர் செய்து, உண் - உண்பாயாக!

---

## ௩௨. நச்சினார்க்கினியர் நற்றமிழ்ச் சங்கம்

ஓர் ஊரில் இளைஞர்கள் பலர் ஒன்றுகூடி ஒரு சங்கம் ஏற்படுத்துவதற்கு எண்ணினர். காலியாகக் கிடந்த ஒரு கட்டிடத்தைச் சங்கம் ஏற்படுத்துவதற்கு ஏற்பாடு செய்தனர். 'நச்சினார்க்கினியர் நற்றமிழ்ச் சங்கம்' என்று பெரிய பலகை ஒன்றில் ஓவியக்காரனைக் கொண்டு அழகாக எழுதச் செய்து அதனைக் கட்டிட முகப்பிலே கட்டித் தொங்கவிட்டனர். அவ்வளவில் தாங்கள் சங்கம் ஒன்றை ஏற்படுத்திவிட்டதாக எண்ணிப் பெருமைப்பட்டுக் கொண்டனர். இரண்டொரு செய்தித் தாள்களை வாங்கிக் கட்டிடத்தில் போட்டனர். இளைஞர்கள் பலரும் அங்கே கூடிச் சீட்டாடுதல், புகைச் சுருட்டுப் பிடித்தல், செய்தித் தாள்கள் படித்தல், ஊர்வம்பளத்தல் முதலிய செயல்களைப் புரிந்துகொண்டிருந்தனர்.

அந்த ஊரிலே அறிவிற் சிறந்த பெரியார்கள் பலரும் செந்தமிழ்ப் புலவர்கள் சிலரும் இருந்தனர். ஆயினும், இளைஞர்கள் அப் பெரியார்களைக் கலந்து பேசவோ சங்கத்திற்கு அழைத்துச் சொற்பொழிவு

கள் நடத்தவோ இல்லை. பெரியார்கள் யாரையேனும் சங்கத்திற் சேர்த்தால் அவர்களுக்கு அடங்கி நடக்கும்படியாக இருக்கும். சீட்டாடுதல் புகைக் குடித்தல் முதலிய செயல்களைச் செய்தல் முடியாது என்னும் எண்ணத்துடன் தான் அவர்கள் பெரியார்களை அச் சங்கத்திற் சேர்க்காமல் இருந்தார்கள். இவர்களுடைய சங்கத்தை ஊரிலிருந்த பெரியவர்களும் ஒரு பொருளாக மதிக்கவில்லை.

ஒருநாள் அவ்வூருக்கு வேறோர் ஊரிலே இருந்து ஓர் அறிஞரும், அவருடன் வேறு சிலரும் வந்திருந்தனர். அவ்வறிஞருடைய பெயர் **நற்றமிழ் நம்பியார்.** அவர் தம் நண்பர்களுடன் தெருவிற் சென்றுகொண்டிருந்தார். அப்பொழுது நச்சினார்க்கினியர் நற்றமிழ்ச் சங்கம் அவருடைய பார்வைக்கு உள்ளாகியது. நற்றமிழ் நம்பியார் அறிக்கைப் பலகையைப் பார்த்தவுடன் வியப்படைந்து தம் நண்பர்களுடன் உள்ளே நுழைந்தார். அங்குச் சீட்டாட்டம், புகைப்பிடித்தல், வீணுரையாடல் முதலிய வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருத்தலைக் கண்டார்.

"பெரிய பெயர் வைத்து அறிக்கைப் பலகை தொங்கவிட்டுவிட்டு இவ்வாறு சிறிய வேலைகளைச் செய்துகொண்டிருக்கிறீர்களே! நச்சினார்க்கினியர் நற்றமிழ்ச் சங்கம் என்னும் அழகிய பெயருக்கேற்ப நல்ல வேலைகள் செய்யக்கூடாதா? பெரியவர்களை அழைத்துச் சொற்பொழிவுகள் செய்யக்கூடாதா? சிறுவர்கள் கல்வி கற்குமாறு தகுந்த ஆசிரியர்களைக் கொண்டு கல்வி கற்பிக்கக்கூடாதா? இக் கட்டிடத்திற்கு நீங்கள் இப் பெயர் வைத்திருப்பதைவிடத் தண்டச் சோற்றுத்

தடிராமர்கள் சங்கம் என்று பெயர் வைத்திருந்தால் எவ்வளவோ நன்ருக இருக்குமே!'' என்று கூறினர்.

நற்றமிழ் நம்பியாரின் உரை இளைஞர்களுக்குச் சினத்தையுண்டு பண்ணியது. ஆயினும், அவர்கள் அவரிடம் எதிர்த்துப் பேசத் துணியவில்லை. தங்களிடம் தவறிருப்பதையுணர்ந்த அவர்கள் பெரியவர்களைத் தங்கள் சங்கத்திற் சேர்ப்பதற்கு முடிவு செய்தனர்.

"பெரியாரைத் துணைக்கொள்"

(இ - ள்.) பெரியாரை - அறிவிலே சிறந்த பெரியவர்களை, துணைக்கொள் - உனக்குத் துணையாகப் போற்றிக்கொள்வாயாக.

---

## ௩௩. சிற்றூரும் சிறுவர்களும்

ஓர் அறிஞர் ஒரு சிற்றூருக்குச் சென்ருர். அவ்வூரிலே ஒரு பள்ளிக்கூடம் இருந்தது. அந்தப் பள்ளியிலே இரண்டே சிறுவர்கள் கல்வி பயின்று கொண்டிருந்தார்கள். பள்ளிக்கூடத்தில் இருந்த இடமோ நூறுபிள்ளைகட்குமேல் அமர்ந்து கல்வி பயில்வதற்கு ஏற்றதாக இருந்தது. அறிஞர் கணக்காயரைப் பார்த்து, "இரண்டே சிறுவர்கட்காக ஒரு பள்ளிக்கூடமேன்?" என்று உசாவினர்.

கணக்காயர் அறிஞரைப் பார்த்து, "இவ் வூரிலே நூற்றுக்கு மேற்பட்ட சிறுவர்கள் இருக்கிருர்கள். அவர்கள் ஒழுங்காகப் பள்ளிக்கு வருவதில்லை. மாடு மேய்த்தல், விறகு பொறுக்குதல், வயலுக்குப் போதல் முதலிய வீட்டு வேலைக்குப் போய்விடுகிருர்

கள். அச் சிறுவர்களுடைய பெற்றோர்களும் அவர் களை ஒழுங்காகப் பள்ளிக்கு அனுப்பிவைப்பதில்லை. அதனால் சிறுவர்கள் அறிவற்ற தடியர்களாக வளர்ந்து கொண்டிருக்கிறார்கள். ஊரிலே பெரிய மனிதர்களே நன்கு படிக்கத் தெரியாதவர்கள். ஒரு சிலர் பல தவறுகளுடன் கையெழுத்துப் போடுவார் கள். மற்றவர்கள் அதுவுந் தெரியாமல் விரற்கோட்டு அடையாளம் வைத்து விடுகிறார்கள். பெற்றோர்கள் இவ்வாறிருப்பதனால்தான் பிள்ளைகளுக்கும் கல்வி கற்பிப்பதிலே முயற்சி அற்றவர்களாகித் தங்களைப் போல அறிவற்றவர்களாக ஆக்குகிறார்கள். 'மகனறிவு தந்தையறிவு' என்பது பெரியோர் வாக்கன்றோ?'' என்று கூறினார்.

கணக்காயர் கழறியவைகளைக் கேட்ட அறிஞர் ஊராரின் அறிவற்ற போக்கைக் குறித்து மிகவும் வருந்தினார். அவர் ஊரார்களை யெல்லாம் ஒருங்கு கூட்டி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். அச் சொற் பொழிவிலே, மக்களுக்கு அறிவுக்கண் இல்லாவிட் டால் அவர்களுடைய புறக்கண்ணாலே எத்தகைய பயனும் ஏற்படமாட்டாதென்றும்; கல்வி கற்காத கயவர்களுக்கும் விலங்கினங்கட்கும் எத்தகைய வேற் றுமையும் இராதென்றும்; கல்வி கற்றவர்கள்தாம் மனிதர்கள் என்றும் கல்வி கற்காதவர்கள் விலங்கு கள் என்றும்; கல்வியறிவற்ற கீழ்மக்கள் இவ் வுல கிலே இருப்பதைவிட இறந்துபடுதலே மேல் என்றும், மிகக் கடுமையாகப் பேசினார். அறிஞரின் சொற் பொழிவு கன்னத்தில் அறைவதைப் போன்றிருந்தது ஊரார்கட்கு. அவர்கள் அன்றுமுதல் தங்கள் சிறு வர்களை ஒழுங்காகப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பத்

தொடங்கியதுடன் தாங்களும் கல்வி கற்று அறிவுடையவர்களாகத் தொடங்கினர்கள்.

"பேதைமை அகற்று"

(இ-ள்.) பேதைமை - அறிவின்மையை; அகற்று - போக்கு.

---

## ௩௪. தருமசாமியும் சிறுவர்களும்

பல நூற்றுண்டுகளுக்கு முன்பு மதுரையிலே **தருமசாமி** என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். தகுந்தபடி அவனுக்குச் செல்வம் இருந்தது. கல்வியறிவையும் அவன் நன்கு பெற்றிருந்தான். அவன் சிறுவனுக இருந்தபோது சிறுபிள்ளைகள் பலரோடு கூடி விளையாடுதல் வழக்கம். தருமசாமி பெரியவனுன பிறகும் அந்தப் பழக்கம் அவனை விடவில்லை.

பல சிறுவர்களைச் சேர்த்துக்கொண்டு பலவகையான விளையாட்டுக்களிலே ஈடுபட்டான். அறிவற்ற சிறுவர்கள் சிலர் சேவற்கோழிகளைப் போருக்குப் பழக்கிப் போர்மூட்டி வேடிக்கை பார்த்துக்கொண்டு இருந்தார்கள். தருமசாமி ஒருநாள் அப்போரைப் பார்த்தான். தானும் அப்போரிலே ஈடுபட்டு அந்தச் சிறுவர்களோடு சேர்ந்து அந்தப் போரை நடத்திக் கொண்டிருந்தான்.

'கோழிகளைப் போருக்கு விடுதல் கூடாது' என்று அரசன் கட்டளை பிறப்பித்திருந்தான். அதனுல் கோழிப்போர் மறைமுகமாக நடந்துகொண்டிருந்தது. அப்போது ஊர்க் காவலர்கள் திடீரென்று

கோழிப் போர் நடக்குமிடத்திற்கு வந்தார்கள். அனைவரையும் பிடித்துக்கொண்டுபோய் முறை மன்றத் தலைவர் முன்பு விட்டார்கள். ஆளுக்குப் பத்து வெண்பொற் காசுகள் தண்டம் இறுக்க வேண்டும் என்றும் ஒரு திங்களுக்குச் சிறையில் இருக்கவேண்டுமென்றும் முடிவாயிற்று. 'நாம் சிறுவர்களுடன் சேர்ந்ததன் பலன் இதுதான்' என்று தருமசாமி மிகவும் வருத்தம் அடைந்தான். அறிவற்ற சிறுவர்களோடு சேர்ந்தால் இவ்வாறுதான் இழிவடைய நேரிடும்.

### "பையலோ டிணங்கேல்"

(இ - ள்.) பையலோடு - சிறுபிள்ளையோடு, இணங்கேல் - கூடாதே.

---

## ௩௫. பொன்னுண்டான்

முன்னாளிலே **பொன்னுண்டான்** என்னும் பெயருடையவன் ஒருவன் பாண்டி நாட்டிலே இருந்தான். அவனுக்குக் கணக்கற்ற பொருள் இருந்தது. அவன் பிறர்க்கு உதவி செய்வதில் பரந்த நோக்கமுங் கொண்டவன். செல்வம் வளருவதற்குத் தகுந்த ஏற்பாட்டைச் செய்துகொள்ளாமல் பெருங்கொடையாளனாகச் சிறந்து நின்றான். அதனால் அவனுடைய பொருள்வளம் மிகவும் குறைந்துவிட்டது. விரைவில் வறுமை அவனைப் பற்றிவிடும்போல் இருந்தது.

ஒருநாள் ஒரு புலவர் பொன்னுண்டானைப் புகழ்ந்து பாடிக்கொண்டு சென்றார். பொன்னுண்டான் தன்னுடைய செல்வப் பெருக்குச் சுருங்கி வருதலை அப் புலவர்க்குக் கூறிச் சிறிது பொருள் கொடுத்

தான். 'கொடையினுல் எனக்கு மிடிவரும்போல் இருக்கிறது' என்று கூறினுன்.

பொன்னுண்டான் புகன்றதைக் கேட்ட புலவர், 'நீ எவ்வழியில் பொருளைப் பெருக்குகிறுய்?' என்று கேட்டார். 'நான் எவ்வழியாலும் பெருக்கவில்லை. செலவு மட்டுந்தான் செய்து கொண்டிருக்கிறேன்' என்று பதிலுரைத்தான் பொன்னுண்டான்.

புலவர் பொன்னுண்டானைப் பார்த்துப், 'பெருக்காத செல்வம் அழிந்துபோகும். நீ செல்வத்தைப் பெருக்குவதற்கு ஏற்பாடு செய்துகொள்ளாமல் செலவு செய்வதற்கு மட்டும் எவ்வாறு ஏற்பாடுசெய்து கொண்டாய்? உனக்குள்ள செல்வத்தை வாணிகத்திலும், பிறவழிகளிலும் நன்கு பெருக்குவாயாக!' என்று கூறிச் சென்றுர். பொன்னுண்டான் தனக்கு எஞ்சியுள்ள செல்வத்தைப் பல வழிகளிலும் பெருக்கிக் கொடையிலே சிறந்து விளங்கினுன்.

" பொருள் தனைப் போற்றிவாழ் "

(இ - ள்.) பொருள்தனை - செல்வத்தை, போற்றி - மேன் மேலும் மிகும்படி காத்து, வாழ் - வாழ்வாயாக.



## ௫௯. புலவரால் ஒழிந்த போர்

இரண்டு மன்னர்களுக்குள் பகையுண்டாயிற்று. இருவரிடமும் படைப்பலமும், பொருட்பலமும் மிகுதியாக இருந்தன. அவர்கள் போரிட்டு ஒருவரையொருவர் தொலைத்துவிடவேண்டும் என்று உறுதி பூண்டு நின்றார்கள். இருவரும் ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள்.

ஓர் அரசன் படையைத் திரட்டிக்கொண்டு பகைவனுடைய அரணைச் சூழ்ந்துகொண்டான். மற்றவன் கோட்டைவாயிற் கதவுகளை அடைத்துக்கொண்டு படையுடன் உள்ளே இருந்தான்.

ஒரே குலத்தைச் சேர்ந்த இரண்டு அரசர்கள் பகைத்துப் போருக்கு முனைந்து நிற்றலைக் கோவூர் கிழார் என்னும் புலவர் கண்டார். அந்தோ இவர்கள் போரைத் தொடங்கினால் பல வுயிர்கள் வீணாக இறந்துபடுமே என்று வருந்தினார். அவர் விரைந்து அவ்வரசர்களிடம் புகுந்தார்.

'நீங்கள் போர்த் தொழிலைத் தொடங்காதீர்கள். அவ்வாறு தொடங்குவீர்களானால் பல உயிர்கள் இறந்து தொலையும். இருவரும் ஒரே குடியைச் சேர்ந்தவர்களாதலின் யார் தோற்பினும் அப்பழி இருவரையுமே சாரும். இருவரும் வெற்றியடைதலென்பதும் முடியாது' என்று அறிவுரைகள் பல கூறிப் போர்த்தொழில் நிகழாமல் தடுத்துவிட்டார்.

"போர்த்தொழில் புரியேல்"

(இ - ள்.) போர்த்தொழில் - போரிடுதலாகிய தொழிலை, புரியேல் - நீ செய்யாதே.

---

## ௩௭. அச்சம் அடைந்த அறிஞர்

ஒரு புலவர் முதன் முதலாக ஓர் அவையின் கண்ணே சொற்பொழிவு செய்வதற்குச் சென்றார். அவையிலே பல அறிஞர்களும், பொதுமக்களும் கூடியிருந்தார்கள். அவர்களைப் பார்த்தவுடனே புலவருக்கு மிகுந்த நடுக்கம் உண்டாகிவிட்டது. நாம் கூறுவதில் யாதேனும் தவறுகளிருந்தால் இவர்கள் நம்மை இகழ்வார்களே என்று திகிலடைந்துவிட்டார்.

புலவர் பேசுவதற்கு எழுந்தவுடனே அவருடைய வாயிலே இருந்து ஒரு மொழிகூட நன்றாகப் புறப்படவில்லை. தட்டுத்தடுமாறி "அவையோர்களே!" என்றார். பிறகு பேந்தப் பேந்த விழித்தார். பிறகு ஒருவாறு துணிந்து, "நான் பேசுவதற்கு எண்ணியுள்ள செய்தி, 'ஒழுக்கத்தின் உயர்வு' என்பதாகும். அதைப்பற்றி உங்களுக்குத் தெரியாமல் இருக்காது. ஆகையால், நான் இப்போது உங்களுடைய அருமையான பொழுதை வீணாக்குவதற்கு விரும்பவில்லை," என்று சொல்லிவிட்டுக் கீழே உட்கார்ந்துவிட்டார்.

அவருடைய மனத் தடுமாற்றத்தையும், அதனால் பேச முடியாமல் உட்கார்ந்துவிட்டதையுங் கண்ட அவையோர்கள் கைகொட்டி நகைத்தார்கள். புலவருக்கோ மிகுந்த வெட்கமாகிவிட்டது. இந்தக் கூட்டத்தைவிட்டு வெளியே ஓடிப்போகலாமா என்று பார்த்தார். புலவர் மனந்தடுமாறி அன்று தாம் அடைந்த இழிவைப் பிறகு ஒருநாளும் மறக்கவில்லை.

**"மனந்தடு மாறேல்"**

**(இ - ள்.)** மனம் - உள்ளம், தடுமாறேல் - கலங்காதே.

---

## ௩௮. சூழ்ச்சி வீழ்ச்சியடைந்தது

மணிபுரம் என்னும் ஊரிலே மாசாத்தன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அந்த மாசாத்தனுடைய வீட்டிற்கு அடுத்த வீட்டுக்கார னுடைய பெயர் ஆனையப்பன். ஆனையப்பனுக்கும் மாசாத்தனுக்கும் எப்பொழுது பார்த்தாலும் பகைமை மூண்டுகொண்டேயிருக்கும்.

ஆனையப்பன் வஞ்சக மனத்தினன். தன் பக்கத்து வீட்டுக்காரனாகிய மாசாத்தனை வஞ்சித்துக் கெடுக்க வேண்டுமென்று முடிவு செய்துகொண்டிருந் தான். மாசாத்தனிடம் ஒரு பலசரக்குக் கடை இருந் தது. அந்தப் பலசரக்குக் கடையில் மிகுதியாகக் கடன் பெற்றுக்கொண்டு ஏய்த்துவிட வேண்டும் என்று முடிவு செய்தான். அந்தக் கெட்ட எண்ணத் துடனே மாசாத்தனுடன் நெருங்கிப் பழகத் தொடங் கினான். மாசாத்தனைப் பார்த்து, 'நாம் பக்கத்து வீட்டுக்காரர்களாக இருப்பதால், இனிமேல் பகையில் லாமல் நண்புடன் நடந்துகொள்வோம்' என்றான். மாசாத்தனும் அதற்கு இணங்கினான்.

நாட்கள் பல சென்றன. ஆனையப்பனும் மாசாத் தனும் சில நாட்கள் பகையில்லாமல் நடந்துகொண் டார்கள். ஒருநாள் ஆனையப்பன் மாசாத்தனைப் பார்த்து, 'நான் உன்னுடைய கடையில் பற்றுவரவு வைத்துக்கொள்கிறேன்; வீட்டிற்கு வேண்டிய சரக்கு களை இன்றைக்கு இருபது வெண்பொற் காசுகளுக்குக் கொடு, ஆடு விற்றுப் பணங் கொடுக்கிறேன்,' என்று இனிமையாகப் பேசினான். ஆனையப்பனுடைய மொழி களைக் கேட்ட மாசாத்தன், 'நண்பா! கடன் என்னும்

பேச்சை மட்டும் விட்டுவிடு. அதனால் நமக்கு ஏற்பட்டுள்ள நட்புக் கெட்டுப்போகும்' என்று சூழ்ச்சியாகப் பதில்ளித்தான். ஆனையப்பன் பழம் பகைவன் என்பதை மாசாத்தன் மனதில் வைத்துக்கொண்டு இடங்கொடுக்காமலும் கடன் கொடுக்காமலும் இருந்தபடியால் ஏமாறாமல் தப்பினான்.

**"மாற்றானுக் கிடங்கொடேல்"**

**(இ - ள்.)** *மாற்றானுக்கு - பகைவனுக்கு, இடங்கொடேல் - இடங்கொடாதே.*

---

## ௩.௯. ஔவையார் திருமண வாழ்த்து

சொற்கள் மிகுதிப்படாமல் சுருக்கமாகவே பேசுதல் வேண்டும். அவ்வாறு பேசுவதுதான் கேட்பதற்கு இனிமையாக இருக்கும். ஔவையார் சுருக்கமாகவும் விளக்கமாகவும் பேசுவதில் மிகவும் கெட்டிக்காரர். அஃது அவர் இயற்றிய நூல்களால் இனிது புலனாகும்.

சோழ மன்னனுக்கு முடிசூட்டு விழா இனிது நடைபெற்றது. புலவர் பெருமக்கள் திரண்டுவந்து பல செய்யுட்களால் அரசனுக்கு வாழ்த்துரை கூறினர்கள். அவர்களுடைய வாழ்த்துரைகள் மிக நீளமாகக் கேட்பதற்குத் தலைவலியுண்டாக்குபவைகளாக இருந்தன. அவைகளையெல்லாம் கேட்டு அலுத்துப்போன ஔவையார் 'வரப்புயர' என்று தமது வாழ்த்துரையைக் கூறினர். ஔவையாருஞ் சில செய்யுட்கள் பாடுவார் என்று எதிர்பார்த்த அரசன் இவ் வாழ்த்துரையைக் கேட்டு வியப்படைந்தான். அதன் பொருள் யாது என்று ஒட்டக்கூத்தரைப் பார்த்துக் கேட்டான்.

ஒட்டக்கூத்தர் அச் சொல்லுக்குப் பொருள் விரிக்கத் தொடங்கினூர். 'வரப்பு உயர நீர் உயரும், நீர் உயர நெல் உயரும், நெல் உயரக் குடி உயரும், குடி உயரக் கோல் உயரும். இவ்வாறு அரசன் சிறந்து விளங்குவான் என்பது ஔவையாருடைய சொல்லுக்குப் பொருள்' என்று ஒட்டக்கூத்தர் உரைத்தார்.

ஒட்டக்கூத்தரின் உரையைக் கேட்டோர் மட்டிலாக் களிப்படைந்தனர். 'இவ்வாறு இரத்தினச் சுருக்கமாக வாழ்த்துரை கூறுதல் யாராலும் முடியாது' என்று கூறி ஔவையாரைப் போற்றினர்.

### "மிகைபடச் சொல்லேல்"

(இ - ள்.) மிகைபட - சொற்கள் மிகுதிப் படும்படியாகச், சொல்லேல் - நீ பேசாதே.

---

## ௩௦. குதிரப்பனூன உலகப்பன்

ஊங்கனூர் என்னும் ஊரிலே உலகப்பன் என்னும் பெயருடைய சிறுவன் ஒருவன் இருந்தான். அவனுக்கு அகவை பதின்மூன்று. அவன் கண்ட உணவுகளை அளவு கடந்து உண்டுகொண்டிருந்தான். அதனூல் அவனுடைய உடம்பு தடித்துக்கொழுத்துப் போய்விட்டது. கை கால்கள் அளவுகடந்து பருத்துப் போனபடியால் நடப்பதற்கும், எக் காரியத்தையாவதுசெய்வதற்கும் முடியாதவனூகிவிட்டான். அவனைப் பள்ளிக்கூடத்தில் வைத்திருந்தபோதிலும் அவன் உண்டியைக் கண்டபடி உண்பதிலேயே முழுக் கருத்

தையுஞ் செலுத்தியிருந்தபடியால், கல்வி ஒரு சிறிதும் வரவில்லை.

பள்ளிக்கூடத்திலே உலகப்பனேடு படித்த பிற மாணவர்கள் உலகப்பனுக்குக் குதிரப்பன் என்று பெயர் வைத்திருந்தார்கள். அவனுக்குக் கல்வி ஒரு சிறிதும் வராததைக் கண்ட பிற மாணவர்கள் அவனைப் பார்த்து, "நீ எதற்குப் பயன்? உன்னுடைய தலையைக் கிள்ளிவிட்டால், நெல் கொட்டி வைப்பதற்குத்தான் பயன்படுவாய்" என்று கேலி செய்துகொண்டிருந்ததுடன், அவனுக்கு யானைக்குட்டி என்றும் மற்ருெரு பெயர் வைத்திருந்தார்கள்.

உலகப்பன் மிகவிரைவில் தானே பள்ளிக்கூடம் போவதை நிறுத்திவிட்டான். அவனுக்குச் சிறிது செல்வம் இருந்தபடியால், உண்டியைமட்டும் கண்டபடி தின்றபடியே இருந்தான். நாளடைவில் அவனுடைய உடல் மேலும் பருத்துவந்தது. அவன் தன்னுடைய பின் பக்கத்தைத் திரும்பிப் பார்க்கவேண்டுமானுல் தலையை மட்டுந் திருப்பிப் பார்க்க முடியாது. உடல் முழுவதையுந் திருப்பினுல்தான் பார்க்கலாம். அவன் உட்காருவதும் எழுந்திருப்பதும் படுப்பதும் மிகவுந் தொல்லை.

உலகப்பனுக்குச் சிறிது பொருள் இருந்போதினும், அவன் பெரும் பூதமாகக் குண்டோதரன்போல் ஆகிவிட்டபடியால், திருமணத்திற்குத் தகுதியான பெண் கிடைக்கவில்லை. மேலும் சிறிது நாள்வரை தடித்துப் பெருத்துக்கொண்டேயிருந்தான். ஒருநாள் இரவு வீட்டு வாயிற்படியால் தடுக்கி வீழ்ந்தான். அதனுல் நல்ல அடிபட்டது. பிறகு பிழைக்காமல்

இறந்துபோனான். ஆகையால் அதிகமாக உணவு தின்பதிலே யாரும் விருப்பங்கொள்ளுதல் கூடாது. விருப்பங் கொண்டால் உலகப்பனைப்போல, நடைப் பிணமாக இருந்து காலமல்லாத காலத்திலே இறக்கும் படியாக நேரிடும்.

"மீ தூண் விரும்பேல்"

(இ - ள்.) மீ தூண் - மிகுதியாக உண்ணுதலை, விரும்பேல் - நீ விரும்பாதே.

---

## ௬௩. பாண்டூர்ப் பல்லவராயன்

முன்னாளிலே பாண்டூர் என்னும் ஊரிலே **பல்லவராயன்** என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் நல்ல உடலாற்றல் அமையப்பெற்றவன். ஓரடியிலே இரண்டுபேரை அவன் நிலத்திலே வீழ்த்திவிடுவான். ஒருநாள் அவனுடைய ஊரிலே இரண்டு பேருக்குப் பகையுண்டாகியது. வாய்ப் பேச்சிலே தொடங்கிய போர் இறுதியில் கை கலத்தலிலே வந்து முடிந்துவிட்டது. இருவரும் வாய்ப்போரை விட்டு விட்டுக் கைப்போரிலே இறங்கினார்கள். ஒருவனிடம் பேனாக்கத்தி இருந்தது. அதை எடுத்துக்கொண்டான். பகைவன் கத்தியுடன் இருத்தலைக் கண்ட மற்றவன் வீட்டுக்குள்ளே ஓடிச்சென்று ஏதாவது அகப்படுகிறதா என்று தேடிப்பார்த்தான். அவனுடைய கையிலே மண்வெட்டி அகப்பட்டது. அதனைத் தூக்கிக்கொண்டு வெளியே ஓடிவந்தான். இருவரும் ஒருவரையொருவர் தாக்கிக்கொள்ளத் தொடங்கினார்கள்.

அப்பொழுது பல்லவராயன் அந்த இடத்திற்கு வந்தான். போர்முகத்திற்குச் சென்றான். இருவரை

யும் பார்த்து, "வீணாகப் போரிடாதேயுங்கள்," என்று அறிவுரை கூறத்தொடங்கினான். சினத்தினால் அறிவுக்கண் மறைப்புண்டிருந்த இருவரும் பல்லவராயன் பகர்ந்ததைக் கேட்கவில்லை. மண்வெட்டியின் வெட்டு ஒன்று பல்லவராயனுடைய வலது கைத் தோள்பட்டையின்மீது பலமாகத் தாக்கியது. அதனால் கையில் பாதி பெயர்ந்துவிட்டது. பல்லவராயன் மருத்துவச் சாலைக்குச் சென்றான். அங்கு அந்தக் கை பழமை போல் கூடிவராதென்றும் அதனை எடுத்துவிட வேண்டும் என்றும் கூறி எடுத்துவிட்டார்கள். அதனால் பல்லவராயன் நொண்டிக் கையனாகிவிட்டான். அவனுடைய ஆற்றல் எதற்கும் பயன்படாமல் போய் விட்டது.

இரண்டு அரசர்களுக்குள் பகைமை வளர்ந்து போர் மூண்டபொழுது ஒரு வீரன் தன்னுடைய ஆண்மைகளைப் பேசிக்கொண்டு போர்முனையில் சென்றான். 'பந்திக்கு முந்தி படைக்குப் பிந்தி' என்னும் பழமொழியை அவன் அடியோடு மறந்துவிட்டுச் சென்றதால், ஒரு கணையொன்று அவனைப் படுகாயப் படுத்திவிட்டது. அவன் விரைவில் இறந்துவிட்டான். போர்முகத்தில் துணிந்து செல்லுகிறவர்கள் இவ்வாறு தான் தொல்லைக்கு உள்ளாவார்கள். ஆகையால், எவரும் பகைமூண்டுள்ள இடத்திலே முன்னாற்சென்று நிற்றல் கூடாது.

" முனைமுகத்து நில்லேல் "

(இ - ள்.) முனைமுகத்து - போர் முகத்திலே, நில்லேல் - போய் நில்லாதே.

## ௬௨. மூர்க்க நண்பன்

சேயூர் என்னும் ஊரிலே இரண்டு சிறுவர்கள் நண்புடையவர்களாக விளங்கினார்கள். அவர்களில் ஒருவன் பெயர் செல்லையா. மற்றவன் பெயர் மாணிக்க வேல். செல்லையா முன்சினமும் மூர்க்கத்தன்மையும் உடையவன். சிலர் மாணிக்கவேலைப்பார்த்து, "நீ செல்லையாவுடன் நட்புக்கொள்ளாதே. அவன் மிகவுந் தீயவன். திடீரென்று ஏதாவது தீமை செய்துவிடு வான்," என்று கூறினார்கள். ஆனால், மாணிக்கவேல் அவர்கள் கூறிய அறிவுரையை ஒரு பொருட்படுத்த வில்லை. "செல்லையா யாருடன் எவ்வாறு நடந்து என்ன செய்தபோதிலும், என்னிடத்தில் தன்னுடைய கெட்ட குணங்களைக் காட்டமாட்டான். என்னிடம் ஒழுங்காக நடந்துகொள்வான்," என்று தனக்கு அறிவு கூறியவர்களுக்குப் பதிலுரைத்துக்கொண் டிருந்தான்.

அறிவு கூறியவர்கள், "இப்பொழுது நாம் கூறி யதைக் கேட்கமாட்டான். 'பட்டால் தெரியும் பறையனுக் குச், சுட்டால் தெரியும் நண்டுக்கு' என்கிறபடி வருகிறதை நுகரட்டும்," என்று சொல்லிவிட்டுப் பேசாமல் இருந்து விட்டார்கள். செல்லையா மூர்க்கத் தன்மையைத்தான் மிகுதியாகப் பெற்றிருந்தானேயல்லாமல் கல்வியறி வைப் பெற்றிருக்கவில்லை. வலிவும் நன்கு அமையப் பெற்றவன்.

ஒருநாள் ஏதோ ஒரு சிறு செய்தியை முன்னிட்டுச் செல்லையாவுக்கும், மாணிக்கவேலுக்கும் பேச்சுக்கள் தடித்தன. "பையலே! என்னிடமா வாலை ஆட்டு கிறாய்? என் செய்தி உனக்கு இவ்வளவு நாளாகப்

பழகிக்கொண்டு வந்தும் தெரியவில்லையா?" என்று செல்லையா மாணிக்கவேலைப் பார்த்துக் கூறியதுடன், தன் மடியில் வைத்திருந்த பேனுக்கத்தியை எடுத்து மாணிக்கவேலினுடைய வயிற்றிலே ஓர் அங்குல ஆழம் பாயும்படியாகக் குத்திவிட்டான்.

குத்துப்பட்ட மாணிக்கவேல் மிகுந்த துன்பப் பட்டான். "அந்தோ இந்தக் கொடியவனுடன் சேரக் கூடாது என்று பலபேர் கூறிய அறிவுரைகளையும் கேட்காதிருந்தோமே! அதனுடைய பலன் இதுதான்," என்று கூறி மிகுந்த துன்பப்பட்டான்.

தீயவர்கள் நல்லவர்களைப்போன்று விளங்கினு லும் நல்லவர்களாகிவிடமாட்டார்கள். எந்தச் சமயத் திலேனும் திடீரென்று தீமையைச் செய்துவிடுவார்கள். ஆகையால் தீயவர்களுடன் நட்புக்கொள்ளுதல் கூடாது.

### " மூர்க்கரோ டிணங்கேல் "

(இ - ள்.) மூர்க்கரோடு - மூர்க்கத்தன்மை யுள்ளவர்களு டனே, இணங்கேல் - நட்புச் செய்யாதே.



## ௬௩. பலபேர் தலையிட்ட வேலை பாழ்

புத்தூர் என்னும் ஊரிலே செங்கண்ணன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் ஒரு வீடு கட்டத் தொடங்கினான். அதற்காக ஒரு திட்டம் வகுத்து முடிவு செய்தான். அப்பொழுது பலரும் பல விதமாகச் செங்கண்ணனுக்கு அறிவு சொல்லத் தொடங்கினார்கள். செங்கண்ணனோ எல்லோருக்கும் நல்லவனாக நடக்கவேண்டும் என்னும் எண்ணமுடையவன். அவன் ஒவ்வொருவருடைய சொல்லையுங்கேட்டு அவ்வவ்வாறு செய்யத் தொடங்கினான். அதனால் அவன் செய்யத் தொடங்கிய வேலை உருப்படியாகாமற்போய்விட்டது. செங்கண்ணனுக்கு அறிவு சொன்னவர்களோ, 'தாங்கள் கூறியபடி கேட்காதபடியினால் தான் அவ் வீட்டு வேலை ஒழுங்காக முடியவில்லை,' என்று சொன்னார்கள்.

செங்கண்ணன் ஒரு பெரியவரைக் கண்டு, "ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாகச் சொல்லுகிறார்கள். அதனால் வீட்டு வேலை முடிவுபெறமாட்டேன் என்கிறது. இதன்பொருட்டு என்ன செய்யலாம்?" என்று கேட்டான்.

பெரியவர் செங்கண்ணனைப் பார்த்துப், "பலபேர் பேச்சைக்கேட்டுச் செய்யும் வேலை பாழாகும் என்பதை நீ அறியாயா? எல்லோருடைய பேச்சையும் ஏன் கேட்கத் தொடங்கினாய்? பெரியோர்களுடைய அறிவுரையை மட்டுங் கேட்டு வேலையைச்செய். அவ்வாறு செய்வாயானால் வேலை விரைவாகவும் ஒழுங்காகவும் நடைபெறும்," என்று அறிவுரை கூறினார். செங்கண்ணனும் அவ்வாறே பலருடைய சொல்லையுங் கேட்

பதை விட்டுவிட்டு, அவ் வேலையிலே பழக்கமுள்ள அறிஞர்களுடைய சொற்களைக் கேட்டு அதன்படி செய்து வீட்டு வேலையை முடித்தான். ஆகையால் அறிவிற் சிறந்தவர்களுடைய சொல்லை மட்டுந்தான் நாம் கேட்கவேண்டும்.

"மேன்மக்கள் சொற்கேள்"

(இ - ள்.) மேன்மக்கள் - உயர்ந்தோருடைய, சொல் - சொல்லை, கேள் - கேட்டு நட.

---

## ருரு. ஔவையாரும் கணக்காயரும்

ஒருநாள் ஔவையார் ஓர் ஊர்வழியாகச் சென்று கொண்டிருந்தார். வழியிலே ஒரு கல்விச்சாலை இருந்தது. அதற்குள்ளே புகுந்தார். சிறிது நேரம் அமர்ந்து கணக்காயர் பாடம் போதித்தலைப் பார்த்தார். கணக்காயர் ஒரு பாட்டைச்சொல்லி அதற்குப் பொருள் சொன்னார். பொருள் விளக்கமாக விளங்கவில்லை. கணக்காயர் கூறியதில் இரண்டுவகையான பொருள் தொனித்தது. ஆனால், இருவகையாகப் பொருள் படும் என்பதையுஞ் சொல்லாமல் மழுப்பலாகக் கூறுவதைப் பார்த்தார். மேலும் ஔவையாரைக் கண்ட அளவில் அக் கணக்காயர் இக் கிழவி நம்முடைய சொல்லில் எத்தகைய தவறு கண்டு பிடிப்பாளோ என்னும் அச்சத்தால் நடுநடுங்கிக்கொண்டிருந்தார்.

ஔவையார் அந்தக் கணக்காயரைப் பார்த்து, "நீர் சொல்வதை விளக்கமாகச் சொல்லும். ஐயத்திற்கு இடம் வைத்து எதையும் சொல்லிக் கொடுக்காதீர். நீர் இப்பொழுது கூறிய பாட்டின் பொருள்

எனக்கே ஐயமாக விருக்கிறதே; இது சிறுவர்களுக்கு எவ்வாறு விளங்கும்? கூறுவதை ஐயத்திற்கிடம் வைத்துக் கூறலாமா? சிறுவர்களுக்கு விளங்குமா?'' என்று கூறிக் கண்டித்தார். அதுமுதல் தாம் கூறும் எதையும் ஐயத்திற்கிடமில்லாமல் கூறலானார்.

நாம் பேசத்தொடங்குவதிலும் ஒரு செய்தியை ஐயத்திற்கிடமாகுமாறு பேசாமல் உறுதி விளங்குமாறு பேசுவதுதான் சிறந்ததாகும். ஐயத்திற்கிடமான பேச்சைக் கேட்போர் உண்மையை உணர்ந்து கொள்ள முடியாமல் விழிப்பர். ஆகையால், சொல்வதில் உறுதிப்பொருள் நன்கு விளங்கவேண்டும்.

**“மொழிவ தறமொழி”**

(இ - ள்.) மொழிவது - சொல்லப்படும் பொருளை, அற - ஐயத்திற்கிடமில்லாமல், மொழி - சொல்லு.

---

## ௬௫. காட்டு முனிவரும் வீட்டு முனிவரும்

ஒரு முனிவர் காட்டிலே தவஞ்செய்துகொண்டிருந்தார். அவர் மிகுந்த மன உறுதியுள்ளவர். தவத்தினால் எத்தகைய காரியத்தையும் எளிதாகச் செய்யக் கூடிய ஆற்றலுடையவர். அவர் ஒருமுறை காட்டை நீங்கி நாட்டிற்கு வந்தார். சென்னை திருமயிலையில் அந்நாள் வாழ்ந்திருந்த திருவள்ளுவர் இல்லத்திற்குச் சென்றார். திருவள்ளுவருடைய வீடு ஒரு குடிசையாக இருப்பதைப் பார்த்தார். திருவள்ளுவருக்கு நல்ல உதவி செய்யவேண்டும் என்று எண்ணினார். திருவள்ளுவருடைய குடிசையை ஓர் அழகிய பெரிய வீடாக மாற்றிவிட்டுத் திருவொற்றியூருக்குச் சென்றார்.

தாம் திருவள்ளுவருக்குப் பேருதவி செய்துவிட்ட தாக அம் முனிவருக்கு மிகுந்த செருக்கு. ஒரு திங்கள் கழித்து மீண்டுந் திருமயிலைக்கு வந்தார். தாம் அமைத்த வீட்டில் திருவள்ளுவர் நலமுடன் வாழ்ந்துகொண் டிருக்கிறாரா என்று பார்த்தார் முனிவர். திருவள்ளுவர் அந்த வீட்டைவிட்டுப் பக்கத்தில் ஒரு குடிசை அமைத் துக்கொண்டு அதில் வாழ்ந்திருத்தலைப் பார்த்தார். "நான் அமைத்துக்கொடுத்த வீட்டில் ஏன் குடியிருக்க வில்லை?" என்று திருவள்ளுவரைப் பார்த்துக் கேட் டார்.

அதற்குத் திருவள்ளுவர், "மோகத்தை 'முனி' என்று அறிஞர்கள் மொழிந்திருக்கிறார்கள். அவ் வாறாக நீவிர் எனக்கு உலகப் பொருள்களின்மேல் அவாவுண்டாக்கப் பார்க்கிறீரே, இது தகுமா?" என்று கேட்டார். அந்த முனிவர், "இந்தப்பெரியோர் தத்துவ ஞானி என்பதை அறியாமற் போனேனே" என்று நாணிச் சென்றார்.

**"மோகத்தை முனி"**

(இ - ள்.) மோகத்தை - நிலையில்லாப் பொருள்களின்மேல் உள்ள அவாவை, முனி - சினந்து விலக்கு.

## ௬௯. தற்புகழ்ச்சி கொண்ட கண்ணபிரான்

ஓர் உயர்நிலைப் பள்ளியிலே கண்ணபிரான் என்னும் பெயருடைய ஓர் இளைஞன் படித்துக்கொண்டிருந்தான். அவன் தற்புகழ்ச்சியிலே மிகுந்த விருப்பம் உள்ளவன். பள்ளிக்கூடத் தேர்வு நெருங்கியது; மற்றைய மாணவர்கள் முயற்சியுடன் தங்கள் பாடங்களைப் படித்துக்கொண்டிருந்தார்கள். கண்ணபிரான் தன்னுடைய வகுப்பிலே மிகுந்த கெட்டிக்காரனாக இருந்தான். அதனால் ஆணவங்கொண்ட மாணவன், "எனக்குக் கணிதம், நிலநூல், தமிழ், ஆங்கிலம் முதலிய எல்லாம் நன்கு தெரியும். எத்தகைய கடினமான கேள்விகளுக்கும் பதில் எழுதிவிடுவேன்," என்று இறுமாப்புடன் சொல்லிக்கொண்டிருந்தான்.

தேர்வு நாள் வந்தது. கண்ணபிரான் அன்று காலையிற் சிறிது படித்தான். பள்ளிக்கூடத்திற்குச் சென்று கேள்வித்தாளை எதிர்பார்த்திருந்தான். கேள்வித்தாள் வந்தது. எல்லாங் கடினமான கேள்விகளாக இருந்தன. ஒரு கேள்விக்குக்கூடக் கண்ணபிரானால் பதில் எழுத முடியவில்லை. அதனால் தேர்வில் தேராமற் போனான். அவனுடைய நண்பர்கள் கண்ணபிரானைப் பார்த்து, "எனக்கு எல்லாம் தெரியும் என்று உன் ஆற்றலைப் புகழ்ந்து பேசினாயே, இப்பொழுது ஏன் தேர்வில் தேரவில்லை?" என்று கூறிக் கேலி செய்தார்கள். அன்றுமுதல் கண்ணபிரான் வல்லமை பேசுவதை அடியோடு விட்டுவிட்டான்.

### "வல்லமை பேசேல்"

**(இ - ள்.)** வல்லமை - உன்னுடைய ஆற்றலை, **பேசேல்** = புகழ்ந்து பேசாதே.

---

## ௬௭. நக்கீரனும் சொக்கநாதரும்

முன்னாளிலே மதுரையிலே **நக்கீரர்** என்னும் பெயருடைய புலவர் ஒருவர் இருந்தார். அவர் எதற்கும் அஞ்சாத தறுகண்மையை உடையவராக விளங்கினார். மதுரைச் சொக்கநாதக் கடவுள் பாடிய பாட்டொன்றுக்குப் புலவர் குற்றங் கூறினார். சொக்கநாதக் கடவுள் மனித வடிவுடனே நக்கீரர் முன் தோன்றினார். 'நான் பாடிய பாடலுக்குப் பழுது சொன்னவர் யார்?' என்று கேட்டார். நக்கீரர் சிறிதும் அஞ்சாமல் 'நான்தான் சொன்னேன்' என்று சினத்துடன் அக் கடவுள் முன் வாதாடத் தொடங்கினார்.

நக்கீரர் அறிவுக் குறைவால் கடவுளைச் சிறிதும் மதிக்காமல் அக் கடவுள் கூறியவைகளை மறுத்து வாதாடினார். நக்கீரருடைய போக்கைக் கண்ட சொக்கநாதக் கடவுளுக்கு மிக்க சினம் உண்டாகிவிட்டது. அவர் தம்முடைய நெற்றிக்கண்ணைச் சிறிது திறந்து காட்டினார். அப்பொழுதுகூட நக்கீரர் அஞ்சாமல் வாதாடினார். கடவுளுடைய தீக்கண் பார்வையால் நக்கீரர் வெப்புநோய் அடைந்து வெப்பம் தாங்கமுடியாமல் பொற்றாமரையில் குதித்துத் தொல்லைப்பட்டார். பிறகு சங்கப் புலவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கிக் கடவுள் நக்கீரரைக் கரையேற்றியருளினார். பெரியோர்கள் முன்பு சொற்போரிட்டால் இவ்வாறுதான் தீமை நேரிடும்.

**" வாதுமுற் கூறேல் "**

(இ - ள்.) வாது - வாதுகளை, முன் - பெரியோர் முன், கூறேல் - பேசாதே.

## ௬அ. கல்வியே சிறப்பளிக்கும்

தண்டுறை என்னும் ஊரிலே, தம்பையா என்றும், தாயங்கண்ணன் என்றும் பெயருடைய இரண்டு இளைஞர்கள் இருந்தார்கள். அவர்களுடைய தந்தை கல்விப் பொருள், செல்வப் பொருள் ஆகிய இரண்டின் பெருமையையும் அறிய விரும்பினான். ஒருவனுக்குக் கல்வி கற்பிப்பதற்கும், மற்றவனுக்குத் தன்னுடைய செல்வம் முழுவதையும் கொடுப்பதற்கும் எண்ணினான். தன்னுடைய கருத்தை மக்களிருவருக்குந் தெரியப்படுத்தினான். யாருக்கு எதுவேண்டும் என்று கேட்டான்.

தம்பையாவாகிய மூத்தவன் தனக்குச் செல்வப் பொருளே வேண்டும் என்றான். தாயங்கண்ணனாகிய இளையவன் தான் கல்வி கற்பதற்கு விரும்புவதாகக் கூறினான். தாயங்கண்ணனைத் தக்க அறிஞரிடத்திலே ஒப்புவித்துக் கல்விப் பயிற்சி செய்வித்தான். பாதிச் செல்வத்தைப் பிரித்துத் தம்பையாவுக்குக் கொடுத்து வாணிகஞ் செய்யுமாறு கூறினான். தம்பையா வாணிகஞ் செய்தான். நல்ல ஊதியம் கிடைத்தது. பொருட்பேறு மிகுதியாதலைக் கண்ட அவன் செருக்கடைந்து நற்குணங்களைப் போக்கிவிட்டான்.

தாயங்கண்ணனோ அறிவு மிகுதிப்பட மிகுதிப்படச் சிறந்து விளங்கினான். தம்பையாவுக்குத் திடீரென்று வணிகத்துறையில் பெரும் பொருள் அழிவுண்டாயிற்று. அதனால் அவன் மிக எளிய நிலைமையை அடைந்தான். தாயங்கண்ணனோ அறிவிற் சிறந்து விளங்கியபடியால் அரசனுடைய அவையிலே

முதல் அமைச்சனாக ஏற்படுத்தப் பெற்றான். தான் கல்விப் பொருளை விரும்பியதன் பலன் கிடைத்ததைக் கண்டு தாயங்கண்ணன் மிகுந்த களிப்படைந்தான்.

**“ வித்தை விரும்பு ”**

(இ-ள்.) வித்தை - கல்விப் பொருளையே, விரும்பு - நீ விருப்பங்கொண்டு கற்பாயாக!

---

## ௯௯. துறவியான மன்னன்

பல நூற்றாண்டுகட்கு முன்பு கருநாடக நாட்டிலே ஓர் அரசன் இருந்தான். அவன் முடிசூட்டப் பெற்ற பிறகு சிலகாலம் அரசாட்சியை நடத்திக்கொண்டிருந் தான். முற் பிறப்பில் செய்த நல்வினையின் மிகுதியி னாலே அவ்வரசனுடைய உள்ளம் அரசாட்சி செய்தலை வெறுத்தது. அவன் தன் மனைவியுடன் பெரியோர் களை அடைந்து அறிவு நூல்களைப் பயின்றான். அதனை நன்கு ஆராய்ந்தான்.

நாளாக நாளாக அரசனுடைய உள்ளம் அர சாட்சி செய்தலை அடியோடு வெறுத்தது. மறுமைக் குப் பயனற்ற இவ்வரசாட்சி வேலையை நாம் ஏன் செய்தல் வேண்டும்? இதனால் நமக்கு யாது பயன்? அரசாட்சியிலே செலவிடும் பொழுது வீண் பொழு தேயாகும். அந்தப் பொழுதை இறைவனை யெண்ணு வதிற் செலவிட்டால், எவ்வளவோ பயன் பெறலாமே, என்று எண்ணினான்.

வீடு, வாசல், மனைவி, தாய்தந்தையர், அரசாட்சி, பொருட்செல்வம் எல்லாவற்றையும் ஒருங்கு துறந்

தான். துறவிக்கோலம் பூண்டு வெளியே சென்றான். நகர மக்களும் அமைச்சர்களும் பிறரும் அரசனைத் தடுத்து நிறுத்தப் பார்த்தார்கள். யாருடைய சொல்லையும் அரசன் கேட்கவில்லை. பெரியோர்களை யடுத்து மேலும் அறிவு நூல்களைப் பயின்று இறுதியிலே வீடுபேறடைந்தான்.

## " வீடுபெற நில் "

(இ - ள்.) வீடு - வீடு பேற்றை, பெற - அடையும்படி, நில் - அதற்குரிய அறிவு வழியிலே நிற்பாயாக.

---

## ருo. அறிஞரும் இளம்பூதனும்

ஓர் ஊரிலே **இளம்பூதன்** என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் சில நூல்களைப் படித்துணர்ந்திருந்தான். ஆயினும் அதற்குத் தகுந்தபடியாக அவன் ஒழுக்கத்தை மேற்கொள்ளவில்லை. தீயவர்களுடன் சேர்ந்து தீயவனாகி நின்றான். அவனிடமிருந்த சில நல்லியல்புகளும் மறைந்துவிட்டன.

இளம்பூதன் தீயவர்களுடன் சேர்ந்துகொண்டு சீட்டாடுதலையும் புகைப் பிடித்தலையும் மற்றும் பல இழிவான செயல்களைப் புரிதலையும் ஒரு பெரியவர் கண்டார்; அவர் அவனைத் தனியே அழைத்து, "உன்னுடைய முகத்தைப் பார்த்தால் அருள்வழிகிறது. மிகப் பெரியவனாகக் கூடிய அறிகுறிகள் உன்னிடம் காணப் பெறுகின்றன. அவ்வாறாக நீ சிறியவர்களுடன் சேர்ந்துகொண்டு இழிதொழிலைப் புரிகிறாயே! இது நினக்குத் தகுமா? நீ தீச்செயல்களை யெல்லாம்

விட்டுவிட்டு நல்லவனாக இருப்பாயானால் பிற்காலத்தில் மிகவுஞ் சிறந்து விளங்குவாய்," என்று அறிவுரைகள் கூறினார்.

பெரியவர் கூறிய அறிவுரையைக் கேட்ட இளம் பூதன் திருந்தினான். அப் பெரியவர் நம்முடைய நன்மையின் பொருட்டே அவ்வாறு சொல்லுகிறார் என்று உணர்ந்தான். பெரியோர்களையே அடுத்துப் பழகத் தொடங்கினான். நாளடைவில் இளம்பூதன் நல்லவனாகி இறுதியிற் சிறந்த மனிதர்களுள் ஒருவனானான். ஒவ்வொருவரும் நல்லவர்களாக இருத்தற்கு முயல வேண்டியது கட்டாயமாகும்.

"உத்தம னாயிரு"

(இ - ள்.) உத்தமனாய்-உயர்ந்த குணமுடையவனாகி, இரு-வாழ்ந்திரு.

---

## ருக. வழிக்குவந்த மயிலப்பன்

ஓர் ஊரிலே மயிலப்பன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவனுக்கு வாழ்க்கை நடத்துவதற்குப் போதிய அளவு செல்வம் இருந்தது. ஒவ்வொருவரும் ஊருடனும் உலகத்துடனும் ஒத்துவாழ வேண்டியது கடமையாகும். அவ்வாறில்லாமல் பிரிந்திருந்தாலோ அல்லது தான் மட்டும் தனித்திருந்தாலோ பல வகையான இடையூறுகள் நேரிடுவது திண்ணம்.

மயிலப்பன் ஊரவர்களுடனே சேர்ந்து, நன்மை தீமைகளிலே கலந்து வாழ விரும்பவில்லை. தனியாக

இருந்தால் ஊரவர்களுடைய தொல்லையில்லாமல் இருக்கலாம் என்று எண்ணினன். ஊரையடுத்துச் சிறிது தொலையில் வீடு கட்டிக்கொண்டு அங்குத் தனியாக வாழத் தொடங்கினன். சிலர் தனியிடத்தில் குடியிருத்தல் தக்கதல்லவென்றும், கள்ளர்களாலும் பிறவற்ருலும் தொல்லையுண்டாகுமென்றும் அறிவுறுத்தினர்கள். மயிலப்பன் அவைகளைக் கேட்கவில்லை. தன் மனப் போக்கின்படி தான் எண்ணிய இடத்தில் வீட்டைக் கட்டிக்கொண்டு நன்மை தீமை முதலிய எதிலுங் கலந்து கொள்ளாமல் இருந்தான்.

ஒருநாள் சில கள்ளர்கள் மயிலப்பனுடைய வீட்டிலே புகுந்து அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு சென்றதுடன் மயிலப்பனையும் வீட்டிலிருந்தவர்களையும் நன்கு புடைத்துவிட்டுச் சென்ருர்கள். அவன் வீட்டில் ஒன்றுமே எஞ்சாமல் கொள்ளைபோய்விட்டது. அவன் இரைச்சல் போடவும் முடியவில்லை. ஊரார்கள் அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்த நேரமாகையால் அவர்களுக்குந் தெரியாமல் போய்விட்டது. அதன் பிறகு மயிலப்பன் ஊருக்குள் வீட்டைக்கட்டிக் கொண்டு எல்லோருடனும் ஒட்டி வாழலானன்.

**"ஊருடன் கூடிவாழ்"**

(இ - ள்.) ஊருடன் - ஊரவர்களுடனே, கூடி - சேர்ந்து, வாழ் - வாழ்வாயாக.

---

## ௫௨. வன்சொல் நன்மையைக் கெடுக்கும்

ஒரு புலவர் வறுமையால் மிகவும் வாடினார். ஒரு செல்வனைக்கண்டு ஏதேனும் பரிசில் பெற்று வரலா மென்று சென்றார். அந்தப் புலவர் எல்லா நூல்களை யும் நன்கு படித்துணர்ந்தவராக இருந்தும் இன்சொல் பேசுவதற்கு உணராதவராக இருந்தார். செல்வனைக் கண்டு தமது வறுமை நிலைமையை உருக்கமாக உரைக்கவில்லை. அழுத்தந் திருத்தமாகவும் வெட் டொன்று துண்டு இரண்டுஎன்பதைப்போலவும், "ஏதா வது கொடுக்க முடியுமா? முடியாதா?" என்று கண் டிப்பாகப் பேசினார்.

அந்தச் செல்வன் இயற்கையில் நல்லவன் தான். இரப்பார்க்குத் தன்னால் இயன்ற உதவியைச் செய்து தான் அனுப்புவான். ஆனால், இந்தப் புலவருடைய கண்டிப்பான பேச்சு அவனுக்குப் பிடிக்கவில்லை. அவன் புலவரைப் பார்த்து, "ஐயா பெரியவரே! தங்க ளுடைய கண்டிப்பான பேச்சுக்கும் நமக்கும் பொருந்தி வராது. ஆகையால், வந்த வழியைப் பார்த்துக் கொண்டு திரும்பிப் போங்கள்," என்று கூறிவிட் டான்.

புலவர் வெளியே வந்தார். ஒரு வேலையாள் புலவருக்கு முன் வந்து அவருடைய வழியை மறித்து நிறுத்தினான். "ஐயா அவர்கள் தங்களிடம் கொடுக்குமாறு கொடுத்தார்கள் ; இதனைப் பெற்றுக் கொள்ளுங்கள்," என்று கூறி நூறு வெண்பொற் காசு களை அவருடைய கையிலே கொடுத்தான். அதனைப் பெற்றுக்கொண்ட புலவர், 'நாம் இத்தகைய வள்ள லிடம் இனிமையாகப் பேசியிருந்தால் எவ்வளவோ

பொருள் கிடைக்குமே' என்னும் எண்ணத்துடன் திரும்பிச் சென்றார்.

"வெட்டெனப் பேசேல்"

(இ - ள்.) வெட்டென - கத்தி வெட்டைப்போல, பேசேல்- ஒருவரோடுங் கடினமாகப் பேசாதே.

---

## ருங. உயிர் பிழைத்த அறிஞர்

ஓர் அறிஞர் ஒரு காட்டு வழியில் தனியாக நடந்து சென்றுகொண்டிருந்தார். அவரிடத்திலே ஆடையைத் தவிர வேறெவ்விதமான பொருளுங் கிடையாது. அதனல் அவர் சிறிதும் அச்சமில்லாமற் சென்று கொண்டிருந்தார்.

திடீரென்று ஐந்தாறு வேடர்கள் அவருக்குமுன் தோன்றினர்கள். புலவரைப் பார்த்து, 'நில்லும்' என்றுகூறி அதட்டினர்கள். புலவர் நின்றார். "என்னிடத்திலே எத்தகைய பொருளும் இல்லை. என்னை வீணுக ஏன் வழிமறிக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

வேடர்கள் புலவரைப் பார்த்து, "பொருளில்லாவிட்டால் போகட்டும். உம்மைக் கத்தியால் வெட்டி நீர் துடிதுடித்துப் பதைத்துச் சாவதையாவது நாங்கள் பார்த்து மகிழ்ச்சியடைகிறோம்," என்று கூறினர்கள்.

கவருதற்குப் பொருள் இல்லாவிட்டாலும், வழிப்போக்கர்களை வருத்தி அவர்கள் துடிதுடித்துச் சாவதைப் பார்த்து மகிழ்வது வேடர்களுடைய பழக்கம் என்பதை அறிந்திருந்த புலவர், அவ் வேடர்களைப் பார்த்து, "நண்பர்களே! நீங்கள் வீணுகத் தீவினை

செய்யாதீர்கள். இப் பிறப்பிலே தீவினையைச் செய்கிறவர்கள்தாம் மறுபிறப்பிலே மிகவும் இழிவான நிலைமையிற் பிறந்து பலவகையான துன்பங்களை அடைகிறார்கள்,'' என்று அவ்வேடர்களுக்குப் பலவாறு அறிவுரை கூறினார். அவ் வறிவுரையால் வேடர்கள் மனந் திருந்தினார்கள். அறிஞருடைய உயிரும் பிழைத்தது.

" வேண்டி வினைசெயேல் "

(இ - ள்.) வேண்டி - விரும்பி, வினை-தீவினையை. செயேல்-செய்யாதே.

---

## ருசு. உண்மை உணர்ந்த முத்துமாணிக்கம்

முதுகுன்று என்னும் ஊரிலே முத்துமாணிக்கம் என்னும் பெயருடைய இளைஞன் ஒருவன் இருந்தான். அவன் பொழுது விடிந்து சாம நாழிகைக்கு மேலே தான் படுக்கையைவிட்டு எழுந்திருப்பான். அவனுடைய தாய் தந்தையரும் முத்துமாணிக்கத்தினுடைய இந்தக் கெட்ட பழக்கத்தைக் கண்டித்துத் திருத்துவதற்கு முயலவில்லை. 'நம்முடைய அருமைக் குழந்தை தூங்கினால் தூங்கட்டுமே; இதனால் குடிமூழ்கியா போய்விடப்போகிறது,' என்று எண்ணிக்கொண்டு பேசாமல் இருந்தார்கள்.

ஒருநாள் முத்துமாணிக்கத்தினுடைய வீட்டிற்கு அவனுடைய உறவினர் ஒருவர் வந்தார். அவர் முத்துமாணிக்கம் நீண்ட நேரம் உறங்குவதைப் பார்த்தார். அவர் முத்துமாணிக்கத்தைப் பார்த்துத், "தம்பி! இவ்வாறு நீண்டநேரம் உறங்காதே. இதனால் உன்

னுடைய வாணுள் குன்றிப்போகும்'' என்று கூறிஞர். "அஃதெவ்வாறு?" என்று முத்துமாணிக்கம் கேட்டான். அந்த உறவினர் முத்துமாணிக்கத்தைப் பார்த்து, " கதிரவனுடைய தேரோட்டுபவனுகிய அருணன் மக்கள் வாணுளைக் கணக்கிடுபவனுவான். அந்த அருணன், தான் எழுவதற்குமுன் எழாதவர்களைத் தன்னுடைய ஒளியாகிய கையினுல் தொடுவான். அவ்வாறு தொட்டுக்கூட எழாதவர்களுடைய வாணுளைக் குறைத்து எழுதிவிடுவான். அதனுல் கூற்றுவன் மிக விரைவில் அவர்களுடைய உயிரையும், உடலையும் வேறு பிரித்துவிடுவான்," என்று கூறிஞர். அன்று முதல் முத்துமாணிக்கம் பொழுது விடிவதற்கு முன் படுக்கையைவிட்டு எழத் தொடங்கிஞன்.

**" வைகறைத் துயிலெழு "**

(இ - ள்.) வைகறை - விடியற்காலத்திலே, துயில் - உறக்கத்தைவிட்டு; எழு - எழுந்திரு.

---

## ருரு. நஞ்சப்பனும் நம்பிள்ளையும்

**நஞ்சப்பன்** என்பவனும், **நம்பிள்ளை** என்பவனும் பக்கத்து வீட்டுக்காரர்கள். நஞ்சப்பன் வஞ்சகமும் தீமைக்குணங்களும் பொருந்திய உள்ளமுடையவன். நம்பிள்ளையோ கள்ளங்கபடு சிறிதும் இல்லாத வெள்ளை மனத்தினன். பக்கத்துவீட்டுக்காரர்களாகிய இருவருக்கும் தீராப் பகையாக இருந்துகொண்டேயிருந்தது. இருவரும் பத்து நாளைக்கு நட்பினர்போல் இருப்பார்கள்; பிறகு பகை மூண்டுவிடும்.

நஞ்சப்பன் கள்ள மனத்தினன் ஆகையால், சமயம் பார்த்து நம்பிள்ளையை ஏமாற்றவேண்டும் என்று திட்டம்போட்டுக் கொண்டிருந்தான். ஒரு முறை நம்பிள்ளை மாடுவிற்று இருநூறு வெண்பொற் காசுகளைக் கையிருப்பாக வைத்துக்கொண்டிருந்தான். அந்தப் பொருளை எப்படியேனும் ஏய்த்துப் பெற்று விடவேண்டும் என்று எண்ணிய நஞ்சப்பன் வஞ்சத் தோடு நம்பிள்ளையிடம் வந்து, "நண்பா! எனக்கு இப் போது இருநூறு வெண்பொற் காசுகள் கட்டாயமாக வேண்டும்; இரண்டு நாட்களில் திருப்பிக் கொடுத்து விடுவேன்," என்றான்.

நம்பிள்ளை, 'சிறிதுநேரம் பொறுத்துவா; கொடுக் கிறேன்," என்றான். நஞ்சப்பன் சென்றவுடன் நம் பிள்ளை தன்னுடைய நண்பர்கள் சிலரிடஞ்சென்று செய்தியைக்கூறி அவர்களுடைய எண்ணத்தைக் கேட்டான். அவர்கள், "கொடுக்காதே! நஞ்சப்பன் உன்னுடைய பகைவனல்லனோ? பிறகு கொடுக்காமல் ஏமாற்றுவான்," என்று கூறினார்கள். நம்பிள்ளை யாது காப்பாகிவிட்டான். அவன் மீளவும் வந்து கேட்ட பொழுது, "எனக்கே இப்போது செலவு இருக்கிறது. ஆகையால் நான் தரமுடியாது," என்று கூறிவிட் டான். நஞ்சப்பன் தன்னுடைய சூழ்ச்சி பலிக்க வில்லையே என்று நாணிச்சென்றான்.

" ஒன்னாரைத் தேறேல் "

(இ - ள்.) ஒன்னாரை - பகைவர்களை, தேறேல் - நம்பாதே.

---



## ௩௪. அறநெறி தவறாத அரசி

முன்னாளில் தமிழ்நாட்டிலே ஒரு பெண்ண[illegible] அரசாட்சி செய்துகொண்டிருந்தாள். அவள் மிகவு[illegible] கண்டிப்பானவள். அவள் தன்னுடைய உடன் பி[illegible] தான் ஒருவனை உயரிய அதிகாரத்திலே அமர்த்[illegible] யிருந்தாள். அவன் தீயொழுக்கம் உடையவன்.

தன்னுடைய அக்காள்தான் அரசியாயிற்[illegible] நம்மை என்ன செய்துவிடுவாள் என்னும் எண்ண[illegible] துடன் மக்களுக்குப் பல அல்லல்களை உண்டாக்கின[illegible] ஒரு மாதினுடைய கணவனைத் துன்புறுத்தின[illegible] அவனைக் கொலைசெய்துவிட்டு அம் மாதைத் து[illegible] புறுத்தவும் முடிவுசெய்தான்.

அம் மாது மிகத்தொலைவிலிருந்து கால் நடையா[illegible] நடந்து சென்று அரசியைக் கண்டாள். அவளுடை[illegible] தம்பியின் தொல்லைகளையெல்லாம் விவரமாகக் கூ[illegible] னாள். அரசி உடனே தன்னுடைய தம்பியை அழைத்[illegible] உசாவினாள். அவனுடைய பதிலில் இருந்து அவ[illegible] கொடுமைகள் புரிவது உண்மைதான் என்[illegible] அரசி உணர்ந்தாள். அவனைத் தூக்கிலே போடுமா[illegible] கட்டளை பிறப்பித்து அவ்வாறே செய்துவிட்டாள். அவளுடைய நேர்மையான போக்கைக் கண்ட மக்க[illegible] அவ்வரசியை மனம் உவந்து வாழ்த்தினார்கள்.

### " ஓரஞ் சொல்லேல் "

(இ-ள்.) ஓரம் - ஒருதலைப்பக்கமான தீர்ப்பை, சொ[illegible] லேல் - யாதொரு வழக்கிலும் பேசாதே.

---